# குமரன்

ஆரம் 19, முத்து 13

November 13, 1941

Record no. 313

*Kumaran̲*

*Āram 19, muttu 13*

*November 13, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. 14 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது — PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19 | காரைக்குடி விஷு-ஸு ஐப்பசி மீ 28-உ (13—11—41) | முத்து 13

## பண்டித ஜவாஹர்லால் நேரு சரித்திரம்

### தியாக வாழ்க்கையும் - தேசத் தொண்டும்

தேச பக்தியிலும், புத்தி நுட்பத்திலும் காஷ்மீர பிராமணர்கள் பேர் பெற்றவர்கள். எனவே, அந்த வகுப்பிலுதித்த ஜவாஹர்லால் நேரு இன்று இந்தியாவின் தவப் புதல்வர்களுள் ஒருவராகத் திகழ்வதில் ஆச்சரியமில்லை. ஆனால், அவருக்குக்குலப்பெருமையிலும், பரம்பரைப் பட்டங்கள், பாத்தியதைகளிலும் வெறுப்புத்தான். நேரு குடும்பத்தின் தியாகமும், வீர உணர்ச்சியும் இத்தேசத்தில் மட்டுமல்ல, உலகம் முழுவதுமே பேர் பெற்றவையாகும். "நான் ஒரு காஷ்மீரப் பிராமணன் என்று பெருமையடித்துக்கொண்ட காலமு மிருந்தது. ஆனால் இப்பொழு தெல்லாம் அதை வெறுக்கிறேன். ஒரு இந்தியன் என்று சொல்ல விரும்புகிறேன்" என்று ஒரு சமயம் பண்டித ஜவாஹர் சொன்னார்.

பண்டித ஜவாஹர் இந்திய வாலிபர்கட்கு ஒரு உத்தம லட்சிய புருஷராக விளங்குகிறார். அவரது வீர வாழ்க்கை இந்திய சுதந்திரப் போரோடு இணைந்து செல்கிறது எனலாம். ஐக்கிய மாகாணக் காங்கிரஸ் நவம்பர் 4-ந்தேதியை ஜவாஹர் தினமாகக் கொண்டாடிற்று இன்று அவர் சிறைக் கைதியாக இருக்கின்றார். தேசத் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்ற ஒரு கோரிக்கை எழுந்திருக்கிறது. அரசாங்கமும் இக்கோரிக்கைக்குச் செவி சாய்க்கும் என்று நம்பப்படுகிறது. (ஒருவேளை இந்தக் கட்டுரை வெளியாகு முன்னர் அவர் சிறையிலிருந்து வெளிவரவுங் கூடும்.)

நவம்பர் 14-ந் தேதி ஜவாஹர் பிறந்த தினம். அன்று அவருக்கு ஐம்பத்திரண்டு வயது பூர்த்தியாகிறது. இந்த ஐம்பத்திரண்டு வருடங்கட்கிடையில் என்னென்ன மாற்றங்கள் நாட்டில் ஏற்பட்டிருக்கின்றன? செல்வத்திலே பிறந்து, செல்வத்திலே திளைத்து, ஆங்கிலப்பழக்க வழக்கங்களிலே படிந்து, இங்கிலாந்து சென்று பாரிஸ்டராகித் திரும்பிய நேரு, தேசப்பற்று மேலிட்டால், தேசத் தொண்டில் ஈடுபட்டு, தியாக வாழ்க்கையை மேற்கொண்டு இன்று வீர புருஷராக விளங்குவது ஒரு பெரிய, ருசிகரமான, போதனை மிக்க சரித்திரமாகும்.

அலகபாத்திலே 1889-நவம்பர்-14உ ஜவாஹர்லால் பிறந்தார். தந்தையார் பண்டித மோதிலால் நேரு பெருமையும், புகழும், செல்வமும் ஓங்கத் திகழ்ந்தார். அவர் ராஜபோக வாழ்க்கையில் மிளிர்ந்தார் என்று கூறுவது மிகையாகாது. கவர்னர்களும், நிர்வாக சபை மெம்பர்களும் அவரது அத்தியந்த நண்பர்கள். அவரது மாளிகையான ஆனந்த பவனம் உயர்ந்த அந்தஸ்திலிருப்பவர்களை வரவேற்று உபசரித்து வந்தது. குழந்தை ஜவாஹர் ஐரோப்பிய முறைகளிலேயே வளர்க்கப்பட்டார். இளமையில் கல்வி கற்பிக்க இங்கிலாந்திலிருந்தே ஆசிரியர்கள் வரவழைக்கப்பட்டனர். பதினைந்தாவது வயதில் அவரைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப ஏற்பாடாயிற்று. எங்கே? இங்கிலாந்திலுள்ள பள்ளிக்கூடத்திற்குத் தான்! பெரிய செல்வந்தர் வீட்டுக் குழந்தையைப் பள்ளிக்கூடத்தில் வைப்பதென்றால் குடும்பம் முழுவதும் பள்ளிக்கூடத்திற்குச் செல்லவேண்டாமா? அதுவே பெரிய வைபவம். பண்டித மோதிலால் இதற்காகத் தமது குடும்பத்துடன் இங்கிலாந்து சென்று திரும்பினார். அங்கே ஹாரோவிலுள்ள பிரபுக்கள் குடும்பப் பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடத்தில் ஜவாஹரையும் சேர்த்தார்கள். அவர் யம். ஏ., பட்டம் பெற்றது கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில். விஞ்ஞான சாஸ்திரத்தில் சிறப்புடன் தேர்ச்சிபெற்றார். காலஞ்சென்ற ஷெர்வானி, ஸென் குப்தா, டாக்டர் கிச்லு முதலிய உலகப்பிரசித்திபெற்ற பிரமுகர்கள் எல்லாம் அவரது கலாசாலைத் தோழர்கள். இவர்கள் பிற்காலத்தில் காங்கிரஸ் போராட்டத்திலும், சிறை வாழ்க்கையிலும் இவருக்குத் தோழராகவே விளங்கினர்.

இங்கிலாந்தில் படிக்கும் போதே ஜவாஹர்லால் இந்தியாவில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்தார். அவை அவரது மனத்தில் பெரிய உணர்ச்சிகளை ஊட்டி வந்தன. லாலா லஜபதிராய் நாடுகடத்தப்பட்டார்; மிதவாதிகளை எதிர்த்துத் திலகர் பெருமான் போர்க் கொடியைத் தூக்கினார். இவையெல்லாம் தூர தேசங்களிலுள்ள இந்திய வாலிபர் மனத்திலும் தேசியக் கனலை மூட்டி வந்தன. கேம்பிரிட்ஜில் படிப்பு முடிந்ததும். ஜவாஹர்லால் பாரிஸ்டர் பரீட்சையில் தேறி 1912-ல் இந்தியா திரும்பினார். இங்கு தந்தையுடன் சேர்ந்து தொழில் நடத்தி அதிலும் திறமைசாலி யென்று புகழ்பெற்றார். 1916ல் டில்லியில் மிக ஆடம்பரமான முறையில் அவருக்கும் ஸ்ரீமதி கமலாவுக்கும் திருமணம் நிகழ்ந்தது. கமலா நேரு, வட இந்தியாவில் ஒரு பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். ராஜாக்களும் மகாராஜாக்களும் இந்த மணத்திற்கு விஜயஞ் செய்து சிறப்பித்தனர். கவர்னர்களும் உயர்தர அதிகாரிகளும் விருந்தினராக வந்திருந்தனர். மகாத்மா காந்தியும் அங்கு பிரசன்னமாயிருந்தாராம். இவ்வளவு சிறப்பாக நடந்த அந்தத் திருமண வைபவத்தையும், மிகுந்த குதூகலத்துடன் விளங்கிய தம்பதிகளையும் பார்த்துவிட்டு அவர் பண்டித மோதிலாலிடம் "இவர்களது மணமாலை முட்கள் நிறைந்த கிரீடமாய் விடுமோ என்றஞ்சுகிறேன்" என்று சொன்னாராம். இந்தக் கூற்று எவ்வளவு தூரம் உண்மையாயிற்று என்பது எல்லோரும் அறிந்த விஷயம்.

பண்டித ஜவாஹர் முதன் முதல் அரசியலிற் கலந்தது தென் ஆப்ரிக்க இந்தியர்களது விஷயமாகத்தான். கோகலேயின் கோரிக்கைக்கு இணங்க, அவர் பல இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து நாற்பதினாயிரம் ரூபாய்க்கு மேல் வசூல் செய்து கொடுத்தார். பின்னர் அன்னி பெஸண்டின் சுயராஜ்யக் கிளர்ச்சி வந்தது. அதில் பாரிஸ்டர் ஜவாஹர் முன்னணியில் நின்றார். அவரோடு தந்தையார் மோதிலாலும் தொடர்ந்தார். அதன் பின்னர் மகாத்மா காந்தி ஆரம்பித்த முதலாவது ஒத்துழையாமைப் போரில் இருவரும் முழு மனதுடன் ஈடுபட்டனர். கிஸான்கள் இயக்கம், வேல்ஸ் இளவரசர் விஜயத்தின்போது நடந்த பகிஷ்காரம், அயல் நாட்டுத் துணி பகிஷ்காரம் இவற்றிலெல்லாம் இருவரும் ஈடுபட்டு நாட்டிற்கு வழி காட்டினர். அலகாபாத்தில் நடைபெற்ற பகிஷ்காரம் காரணமாகத் தந்தைக்கும் மகனுக்கும் சிறைத் தண்டனை கிடைத்தது. ஆனால் மூன்று மாதத்தில் ஜவாஹர் விடுதலை செய்யப்பட்டார். இதற்குப் பின்னும் பன்முறை கைதியாகித் தண்டிக்கப் பட்டார்.

1922முதல் 1925 வரை அலகாபாத் முனிசிபல் தலைவராக ஜவாஹர் விளங்கினார். அவரது நிர்வாகத்தைப் புகழ்ந்து, நகரசபைக் கமிஷனர்கள் (ஐரோப்பியர்கள்) தங்கள் அறிக்கைகளில் குறிப்பிட்டிருக்கின்றனர். 1923 முதல் 1927 வரை அவர் காங்கிரஸ் காரியதரிசியாக ஊழியம் புரிந்தார்.

1926-ல் அவர் தமது மனைவியாருடன் ஐரோப்பா சென்று சர்வ தேசக்

(14-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-00 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-45.

O

### நவம்பர் 13உ வியாழன்

1·00—1·30 } 2·10—2·40 } ஸ்ரீமதி வல்லவம் பாட்டு
5·00—5·45 வி. சேதுராமய்யா வயலின்
6·15—6·35 நடிப்பு மோகம்—நாடகம்
6·35—7·00 வி.ஜே. வர்மா புல்லாங்குழல்
8·00—9·15 திருச்சியில் உள்ளபடி.

★

### 14உ வெள்ளி

1·00—1·30 பி. என். நரசிங்கராவ் பாட்டு
5·00—5·45 } 8·00—8·30 } துறையூர் எம். ராஜகோபால சர்மா பாட்டு
6·05—6·35 டி. எஸ். சேஷாத்திரி ஐயங்கார் பாட்டு
6·35—7·00 ஸ்ரீமதி டி. ப்ருந்தா வீணை
7·10—7·25 பி. கோதண்டபாணி பாட்டு

★

### 15உ சனி

1·00—1·35 } 5·45—6·00 } டி. பி. ராஜகோபால் பாட்டு
5·00—5·45 } 6·30—7·00 } ஸ்ரீமதி எம். எஸ். விஜயாள் கோஷ்டி வாத்தியத்துடன் பாட்டு
6·05—6·30 ஸ்ரீமதி வேதாம்பாள் சிங்காரச்சாரி பாட்டு
8·00—9·15 செம்மங்குடி ஸ்ரீனிவாஸய்யர் பாட்டு

★

### 16உ ஞாயிறு

5·00—5·45 } 8·00—8·30 } ஜி. சுப்ரமண்ய தேவரா வயலின்
6·05—6·35 ஸ்ரீமதி கங்காபாய் சுப்ரமண்யம் பாட்டு
6·35—7·00 பெலகவாடி வரதராஜ ஐயங்கார் பாட்டு
8·30—9·00 ஸ்ரீமதி ஸ்வர்ண சரஸ்வதி பாட்டு

★

### 17உ திங்கள்

1·00—1·30 ஏ. எஸ். பத்மநாப சர்மா பாட்டு
1·35—2·00 ஸ்ரீமதி ருக்மணி கிருஷ்ணன் பாட்டு
5·00—5·45 } 6·30—7·00 } ஸ்ரீமதி எஸ். நரசிம்மா வீணை
7·00—7·10 எஸ். வையாபுரிப் பிள்ளை பேச்சு-யாமறிந்த தமிழ்மொழி
8·00—9·00 திருச்சியில் உள்ளபடி

★

### 18உ செவ்வாய்

1·00—1·30 } 6·05—6·35 } வி. டி. ஸ்ரீனிவாச மூர்த்தி புல்லாங்குழல்
2·10—2·40 } 5·00—5·45 } ஸ்ரீமதி ஏ. பாலத்ருபுர சுந்தரம்மா வீணை, பாட்டு
8·00—8·30 ஸ்ரீமதி கோலார் ராஜம் பாட்டு

★

### 19உ புதன்

1·00—1·30 ஸ்ரீமதி என்.வி. பத்மலக்ஷ்மி வீணை
1·35—2·00 } 6·05—6·35 } என். எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் பாட்டு
5·00—5·45 } 6·35—7·00 } வி. மாணிக்கம் சகோதரர்கள் நாதசுரம்
5·45—6·00 } 7·10—7·25 } ஸ்ரீமதி வி. பாகீரதி பாட்டு
8·05—8·30 வி. ஏ. செல்லப்பா ஷை.

★

### 20உ வியாழன்

1·00—1·30 } 2·10—2·40 } என். ஸ்ரீனிவாச ராவ் பாட்டு
5·00—5·45 ஸ்ரீமதி சுந்தரி ரமணன் வயலின்
6·35—7·00 டி. பலராமன் கிளாரினெட்
8·00—9·00 திருச்சியில் உள்ளபடி

## யந்திர நுட்பப் பயிற்சித் திட்டத்தின் அபிவிருத்தி

### கிட்டத்தட்ட 300 இடங்களில் பயிற்சி

இந்திய சர்க்காரின் யந்திர நுட்பப் பயிற்சித் திட்டம் விறு விறு என்று அபிவிருத்தி யடைந்து கொண்டிருக்கிறது. ஒரு வருஷத்துக்கு சற்று முன்னர்தான் இத் திட்டம் ஆரம்பித்து வைக்கப்பட்ட போது 15,000 பேருக்குப் பயிற்சி அளிக்க உத்தேசித்திருந்தது. இப்பொழுது இத் திட்டத்தின் லட்சியம் 1943 மார்ச் மாதத்துக்குள் 48,000 பேருக்குப் பயிற்சி யளித்து விடவேண்டும் என்பது. நாட்டில் உள்ள கிட்டத்தட்ட எல்லா யந்திர பயிற்சி சாலைகளும் பட்டறைகளும், தொழிற்சாலைகளும் இக்காரியத்துக்காக உபயோகப்பட்டு வருகின்றன. கிட்டத்தட்ட 300 இடங்களில் பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றது. சீக்கிரமே ஒரே சமயத்தில் 25,000 பேருக்குப் பயிற்சி அளிக்க முடியும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. யந்திர நுட்பப் பயிற்சி விசாரணைக் கமிட்டியார் முதலில் போட்ட திட்டத்தை விட அதிகமாக வெகுதூரம் முன்னேறி விட்டோம்.

பயிற்சி சம்பந்தமாகவும் மிக்க அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. சில தொழில்கள் சம்பந்தப்பட்ட மட்டில், முதலில் போட்ட திட்டப்படி பன்னிரண்டு மாதகாலத்துக்குப் பதில் நாலிலிருந்து ஆறுமாதங்களுக்குள் பயிற்சியை முடிப்பதற்கான, தீவிரமான பயிற்சி அளிக்கப்படுகிறது.

திட்டம் மிகவும் அபிவிருத்தி அடைந்து விட்டது காரணமாக, இவ்வருஷம் வழக்கமாக பிரதேச இன்ஸ்பெக்டர்கள் கூடும் மகாநாட்டுக்குப் பதில் நவம்பரில் கூடும் மகாநாட்டில், பிரதேச இன்ஸ்பெக்டர்களும், தேசிய தொழில் சங்கத்தலைவர்களும் இருப்பார்கள். இந்த மகாநாடு பயிற்சித் திட்ட சம்பந்தமான விஷயங்களையும், தேசிய சேவை அவசரச் சட்டத்தின் அமுலைப் பற்றியும் விவாதிக்கும்.

வெளியிலிருந்து வரவழைக்கப்படும் 100 பிரிட்டிஷ் பயிற்சியாளர்களில் 50 பேர் ஏற்கெனவே வந்து சேர்ந்து, அநேக இடங்களில் வேலைக்கு அமர்ந்து விட்டார்கள். இன்னும் 20 பேர் இந்தியாவுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள் வேலை ஒப்புக் கொள்ள வேண்டிய ஸ்தாபனங்களை நிச்சயப்படுத்தியாகி விட்டது.

இத்துடன் பெவின் பயிற்சித் திட்டமும் துரிதமாக வேலை செய்து கொண்டிருக்கிறது. இதன் பிரகாரம் இந்தியத் தொழிலாளிகள் ஐம்பது ஐம்பது பேராகப் பிரிட்டனில் பயிற்சி அளிக்கப்படுகின்றனர். பெவின் பையன்களின் முதல் கோஷ்டி ஜனவரி மாதம் இந்தியாவுக்குத் திரும்பிவரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. வந்ததும் தங்கள் தேர்ச்சிக்கேற்ப, இவர்கள் பீரங்கிப் பட்டறைகள், அல்லது தேசிய வேலை செய்யும் இதர பட்டறைகளில் போர்மென்களாகவோ, அல்லது நாடெங்கு முள்ள பயிற்சிக் கழகங்களில் ஆசிரியர்களாகவோ நியமிக்கப்படுவார்கள். மூன்றாவது கோஷ்டி பிரிட்டனுக்குச் சென்று கொண்டிருக்கிறது. நான்காவது கோஷ்டி ஒருவேளை டிசம்பர் மாதம் இங்கிலாந்துக்குப் புறப்படலாம்.

## நடப்புவட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | இரங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| விக்கிரம ஐப்பசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| கார்த்திகை | 29 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| தை | 29 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மாசி | 30 | 0-6-0 | 0-4-9 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| பங்குனி | 30 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| விஷு சித்திரை | 31 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | — |
| வைகாசி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆனி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆடி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆவணி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| புரட்டாசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |

## ரயில் வண்டிப் போக்குவரத்து

| வண்டியின் நிர். .... | 65 | 1 | 179 | 29 | 31 | 7 |
|---|---|---|---|---|---|---|
| திருச்சி புறப்படும் நேரம் | 3-35 | 7-30 | 10-26 | 13-25 | 17-10 | 22- 0 |
| புதுக்கோட்டை ஷை | 5- 8 | 8-51 | 11-58 | 15-10 | 18-52 | 23-26 |
| நமுனசமுத்திரம் ஷை | 5-19 | 9- 2 | 12- 9 | 15-21 | 19- 3 | — |
| திருமயம் ஷை | 5-32 | 9-15 | 12-22 | 15-35 | 19-17 | 23-46 |
| காரைக்குடி ஷை | 6-10 | 10- 3 | 12-59 | 16-47 | 20- 0 | 0-28 |
| தேவகோட்டை ரோடு | 6-18 | 10-11 | 13- 7 | 16-55 | | — |
| கல்லல் ஷை | 6-36 | 10-29 | 13-32 | 17-13 | | 0-52 |
| அரண்மனை சிறுவயல் | 6-42 | — | 13-38 | 17-19 | | — |
| காட்டரசன்கோட்டை | 7- 5 | 10-52 | 14- 1 | 17-42 | | 1-19 |
| சிவகெங்கை ஷை | 7-16 | 11- 3 | 14-11 | 17-53 | | 1-30 |
| மானாமதுரை சேரும்நேரம் | 8- 0 | 11-33 | 14-50 | 18 31 | | 2- 1 |

| வண்டியின் நிர். .... | 286 | 284 | 546 | 290 | 282 | 288 |
|---|---|---|---|---|---|---|
| மானாமதுரை புறப்படும் நேரம் | 8-10 | 11-47 | 15-12 | 17- 2 | 18-55 | 21-45 |
| மதுரை சேரும் நேரம் | 9-35 | 13- 5 | 16-26 | 18-28 | 20-28 | 23- 0 |

| வண்டியின் நிர். .... | 287 | 289 | 545 | 281 | 285 | 283 |
|---|---|---|---|---|---|---|
| மதுரை புறப்படும் நேரம் | 0-35 | 6-40 | 10-24 | 13-43 | 15-35 | 17-18 |
| மானாமதுரை சேரும் நேரம் | 1-58 | 7-57 | 11-45 | 15-0 | 16-59 | 18-34 |

| வண்டியின் நிர். .... | 66 | 32 | 68 | 30 | 2 | 34 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| மானாமதுரை புறப்படும்நேரம் | | | 8-15 | 12- 4 | 15-14 | 17- 8 | 18-45 |
| சிவகெங்கை ஷை | | | 8-52 | 12-41 | 15-44 | 17-54 | 19-22 |
| காட்டரசன்கோட்டை ஷை | | | 9- 3 | 12-53 | 15-56 | 18- 5 | 19-33 |
| அரண்மனை சிறுவயல் | | | 9-25 | 13-15 | — | 18-27 | 19-55 |
| கல்லல் ஷை | | | 9-32 | 13-33 | 16-19 | 18-34 | 20- 2 |
| தேவகோட்டை ரோடு ஷை | | | 9-49 | 13-50 | 16-36 | 18-51 | 20-19 |
| காரைக்குடி ஷை | 1- 0 | 6-40 | 10-11 | 14- 9 | 16-55 | 19-10 | 20-38 |
| திருமயம் ஷை | 1-35 | 7-15 | 10-44 | 14-45 | 17-29 | | 21-12 |
| நமுனசமுத்திரம் ஷை | 1-49 | 7-29 | 10-58 | 14-59 | 17-43 | | 21-26 |
| புதுக்கோட்டை ஷை | 2- 4 | 7-44 | 11-13 | 15-14 | 17-58 | | 21-41 |
| திருச்சி சேரும் நேரம் | 3-30 | 9-27 | 12-52 | 16-50 | 19-12 | | 23- 6 |

குறிப்பு:— 29—ம்-நிர். வண்டி நேரே மதுரை ஜங்ஷனுக்குப்போகிறது. 8-நிர் வண்டி நேரே திருச்சி-விழுப்புரம் கார்டு லயன் வழியாக சென்னை-எழும்பூர் போகிறது.

## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1 முதல் 3 வரை; மாலை 4 முதல் 10 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-45.

O

### நவம்பர் 13உ வியாழன்

1·35—2·00 ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் பாட்டு
5·00—5·45 } 6·30—7·15 } திருவாவடுதுறை என். ராஜரத்தினம்பிள்ளை பாட்டு
8·00—9·20 பாபா கே. எஸ். வெங்கடராமய்யா வயலின், வாளாடி சுப்பிரமணிய பிள்ளை மிருதங்கம்

★

### 14உ வெள்ளி

1·35—2·00 எச். எஸ். மத்வாச்சார் கோட்டு வாத்தியம்
5·00—5·45 } 8·45—9·20 } சேலம் ஜி. தேசிகன் பாட்டு
6·30—7·00 } 8·00—8·30 } பி. என். அங்கப்ப பிள்ளை நாதசுரம்

★

### 15உ சனி

1·35—2·00 கானலோல வீணை
2·05—2·30 } 5·00—5·45 } ஸ்ரீமதி கே. எஸ். ராஜலக்ஷ்மி பாட்டு
6·30—7·00 } 8·00—9·15 } சென்னையில் உள்ளபடி

★

### 16உ ஞாயிறு

1·35—2·00 } 5·00—5·45 } எஸ். ராமநாதன் பாட்டு
2·05—2·30 } 8·45—9·20 } ஸ்ரீமதி எம். ஆர். வாச்வாம்பாள் பாட்டு
6·30—7·15 } 8·00—8·45 } தேசமங்கலம் சுப்ரமண்ய ஐயர் வீணை

★

### 17உ திங்கள்

1·35—2·00 } 6·30—7·15 } ஒய். என். ஸ்ரீனிவாசமூர்த்தி பாட்டு
5·00—5·45 அய்யம்பேட்டை வேணுகோபால பிள்ளை நாதசுரம்
8·00—9·20 ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் பாட்டு, குருராஜப்பா வயலின், வாளாடி சுப்ரமண்ய பிள்ளை மிருதங்கம்

★

### 18உ செவ்வாய்

1·35—2·00 } 5·00—5·45 } ஸ்ரீமதி பி. அழகுரத்தினமாள் கோட்டு வாத்தியம்
8·00—9·20 எஸ். வி. சுப்பையா பாகவதர் பாட்டு, வி. சுந்தரேசன் வயலின்; திருக்கோகர்ணம் மீனாக்ஷிசுந்தரம் மிருதங்கம்

★

### 19உ புதன்

1·35—2·00 ஸ்ரீமதிகள் விசாலாக்ஷி, சங்கரி பாட்டு
5·00—5·45 } 8·00—8·45 } ஆர். கே. நாராயணஸ்வாமி பாட்டு
6·30—7·15 } 8·45—9·20 } மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை வயலின்

★

### 20உ வியாழன்

1·35—2·00 ஸ்ரீமதி செங்கமலவல்லி அம்மாள் பாட்டு
5·00—5·45 } 6·30—7·00 } கே. எஸ். ரங்கநாதன் புல்லாங்குழல்
7·15—7·30 தமிழிசை சங்கம் — வேலூர் டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் பேச்சு.
8·00—9·20 மதுரை மாரியப்ப ஸ்வாமிகள் பாட்டு, மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை வயலின், குத்தாலம் சிவவடிவேலு பிள்ளை மிருதங்கம்.

---

ருஷ்ய உழவ னொருவன் உருளைக்கிழங்குச் செடியும் தக்காளிச் செடியும் கலந்த ஒரு புதிய செடியைச் சிருஷ்டித்திருக்கிறானாம். கிளைகளில் தக்காளிப் பழமும், வேரில் உருளைக் கிழங்கும் உற்பத்தியாகின்றனவாம்.



# இந்தியா-பர்மா ஒப்பந்தம்

## இந்தியர் நலன்களுக்குச் சிறிதும் பொருத்தமற்றது

### இந்தியா சட்ட சபையில் "ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் பிரசங்கம்

★

இந்திய சட்டசபைக் கூட்டத்தில் இந்தியா—பர்மா ஒப்பந்தம்பற்றி நடைபெற்ற விவாதத்தின்போது கனம் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் நவம்பர் 4உ ஷை ஒப்பந்தத்தைப்பற்றிப் பேசியது வருமாறு:—

இந்தியா—பர்மா குடியேற்ற ஒப்பந்தம் இத்தேசத்தில் யாருக்கும் திருப்தி அளிக்கவில்லை யென்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அயல் தேசத்தார்க்கு பர்மா மனமுவந்து அளிக்கும் மரியாதையைக் கூட இவ்வொப்பந்தம் இந்தியருக்குக் கொடுக்க மறுக்கிறது. இந்திய நலன்கள் தக்கபடி கவனிக்கப்படவில்லை. பர்மாவில் இந்தியர்கள் ஏராளமாக முதல் போட்டிருக்கிறார்கள். பர்மாவில் வர்த்தகம், விவசாயம், கைத்தொழில் ஆகியவற்றின் வளர்ச்சிக்காக இந்தியர்கள் எடுத்துக்கொண்ட உழைப்பின் பயனாக அவர்களுக்கு விலையுயர்ந்த உரிமைகள் பல அங்கே கிடைத்திருக்கின்றன. இந்த உரிமைகள் மதிக்கப்பட வேண்டியது நியாயமாகும். பர்மாவில் இந்தியர் நடத்திவரும் தொழிலின் அஸ்திவாரத்திற்கு ஒப்பந்தம் எவ்வாறு ஆபத்தை உண்டுபண்ணுகிறதென்பதை ஸர் கிரிஜா சங்கர் பாஜ்பாய் உணர்ந்திருந்தால், அந்த ஒப்பந்தத்தை அவர் அவ்வளவு எளிதாக நிறைவேற்றியிருக்க மாட்டார். பர்மாவையும் அதன் பிரச்னைகளையும் பற்றித் தெரிந்த உத்யோகப் பற்றற்ற இந்தியர்களைத் தூதுக்கோஷ்டியுடன் சேர்த்துக் கொள்ளாதது தான் ஆரம்பத்திலே செய்த தவறாகும். நிலைமையைப் பரிசீலனை செய்வதற்கான பேச்சு வார்த்தைகள் நடத்தவே தாம் பர்மா போவதாக ஸர் கிரிஜா சங்கர் சொன்னார்; ஆனால் அவர் ஒப்பந்தத்தை முடித்துக் கொண்டே திரும்பினார். இந்த ரகசியத்துக்கு என்ன தேவை? இவ்வாவு முக்கியமான ஒரு விஷயத்தில் இந்திய மகாஜனங்கள் அல்லது இதனால் பாதிக்கப்படுபவர்களாவது தங்களது அபிப்பிராயத்தையும் தெரிவித்துக்கொள்வதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள். எந்த விதமாக இவ்வொப்பந்தத்தைப் பார்த்தாலும், அதை ஆதரித்து ஒரு வார்த்தை கூட என்னால் சொல்ல முடியவில்லை. சிறிதும் பொருத்தமற்ற இவ்வொப்பந்தத்தை ஸர் கிரிஜா சங்கர் நிறைவேற்றி அதன் பொறுப்பை கனம் ஆனேமீது சுமத்தி விட்டுப் போய்விட்டார்.

பர்மா அரசியல் சட்டம் நிறைவேறும் சமயம், 1935ல் இங்கிலாந்து சென்ற பர்மா இந்திய தூதுக்கோஷ்டிக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிக்கு இந்த ஒப்பந்தம் விரோதமாகும். அந்த தூதுக் கோஷ்டியில் நானும் ஒரு அங்கத்தினராக இருந்தேன். இந்தியா மந்திரியையும், உதவி இந்தியா மந்திரியையும் தூதுக்கோஷ்டி பேட்டி கண்டது. பர்மாவில் இந்தியர் குடியேறும் விஷயத்தைப் பிரஸ்தாபித்தோம். இந்தியா மந்திரியும் உதவி இந்தியா மந்திரியும் திறமையற்ற தொழிலாளிகள் விஷயத்தில் மட்டுமே சிறிது கட்டுப்பாடு செய்யப்படுமென்றும், ஆனால் மற்ற இந்தியர் பர்மா செல்வதில் எவ்விதத் தடையும் எச்சமயத்தும் ஏற்படுத்தப்பட மாட்டாதென்றும் எங்களிடம் சொன்னார்கள். இதே வாக்குறுதியை அட்டார்னி ஜெனரல் ஸர் தாமஸ் இன்ஸ்கிப்பும் காமன்ஸ் சபையில் திருப்பி எடுத்துரைத்தார். 1936ல் உதவி இந்தியா மந்திரி மிஸ்டர் பட்லர் இதே வாக்குறுதியை மீண்டும் வற்புறுத்தினார். பயப்படுவதற்குக் காரணமில்லையென எண்ணினோம். இவ்வளவு பகிரங்கமாகவும், அதிகார தோரணையிலும் அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் லேசாகப் புறக்கணிக்கப்பட்டும், அவ்வாறு வாக்குறுதி யளிக்கப்படாதது போல் பாவிக்கப்பட்டு மிருக்கின்றன. வாக்குறுதிகளை மட்டும் ஞாபகத்தில் வைத்திருந்தால், இந்த ஒப்பந்தம் முடிக்கப்பட்டிருக்க மாட்டாது.

அதே போல, பர்மாவுக்கு இந்தியர்கள் செய்துள்ள ஊழியங்களையும் மறந்துவிட்டார்கள். பர்மாவை இந்தியர் வளப்படுத்தியிருக்கின்றனர். ஆனால் இந்த ஒப்பந்தப்படி, பர்மாவில் இந்தியர் கால் வைக்கக் கூடாதென்றும், மீறினால் நடவடிக்கை யெடுக்கப்படுமென்றும் தடுக்கப்படுகிறது.

நீண்ட காலமாக பர்மாவில் இந்தியர்களுக்கும் பர்மியர்களுக்குமிடையே நல்லுறவும் நட்புரிமையும் இருந்து வருகின்றன. ஓரிடத்தில் ஒரு கலவரம் அல்லது மற்றோரிடத்தில் ஒரு சச்சரவு ஏற்படுவது காரணமாக இந்த நிலைமைக்குப் பங்கம் ஏற்படாததலால், இரு தேசங்களுக்குமிடையே மிகுதியான நேசப்பான்மையே இருந்து வருகிறது என்று சொல்லவேண்டும். இந்த நேசப்பான்மை இன்றும் அப்படியே இருந்து வருகிறது என்று நிச்சயமாகச் சொல்லலாம். பர்மிய ஜனத்தொகையில் பெரும் பகுதியும் தங்கள் பொருளாதார நிலைமையை அபிவிருத்தி செய்வதற்காக எடுக்கப்படும் நடவடிக்கைகளை வரவேற்கிறார்கள் என்றாலும், இந்த ஒப்பந்தத்தில் சொல்லியிருக்கிறபடியுள்ள இத்தகைய அவமதிப்பான கட்டுப்பாடுகளை விதிக்க மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பர்மாவுக்கும் இந்தியாவுக்குமிடையே இருந்துவரும் சிநேகபூர்வமான தொடர்பு இன்னும் அப்படியே இருந்து பலப்படும்படி செய்யவேண்டியது நமது கடமையாகும். பர்மா செல்லும் இந்தியர் மீது ஒழுங்கற்ற வெட்கமான கட்டுப்பாடுகளைச் சுமத்துவது இதற்குரிய வழியன்று.

இந்தியர் இவ்வொப்பந்தத்தை அங்கீகரிக்க வேண்டுமானால், இதை மிகுதியும் திருத்தி யமைக்கவேண்டும். எங்கும் கேள்விப் படாத கடுமையான தண்டனைகளை விதிக்கும் 14-வது பிரிவு போன்ற வேற்றுமை பாராட்டும் சில ஷரத்துகள் ஒழியவேண்டும்; அனுமதிச் சீட்டு முறையும், கட்டணங்களும் ஒழியவேண்டும். பர்மாவில் ஒருவன் 9 வருஷம் தங்கியிருக்க வேண்டும் என்ற வரையறை அநீதியானதும் தர்க்க ரீதிக்கு விரோதமானதுமாகும். ஒரு மனிதன் தனது 25 அல்லது 30-வது வயதில் பர்மா சென்று ஒரு வேலையில் அமர்கிறான் அல்லது ஒரு தொழிலை ஆரம்பிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். 9 வருட முடிவில்—அவன் அனுபவம் பெற்று, தொழிலும் விருத்தியடைய ஆரம்பிக்கும் பொழுது—தனது மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு இந்தியாவுக்குக் கப்பலேற வேண்டியதுதான். அவன் திரும்ப பர்மா செல்ல முடியாது. இதுதான் நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஒப்பந்தம். பர்மாவில் தனது வாழ்க்கையில் முக்கியமான காலத்தைக் கழித்துவிட்டு, அவன் தனது ஜீவனத்துக்காக வேறு தேசங்களை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. அவன் ஸ்தாபித்த தொழில் மறையும்; அவன் சம்பாதித்த சொத்தை அதுவே பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். இது தான் ஒப்பந்தம். இதுபோன்ற கட்டுப்பாடுகள் எடுபடவேண்டும்.

இந்த ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக் கொள்ளாவிட்டால், இதே தோரணையில் பர்மாவில் சட்டம் நிறைவேற்றப்பட்டு விடும் என்று சொல்லப்படுகிறது. பர்மா சட்ட சபையில் இம்மாதிரிச் சட்டம் கொண்டுவரப்பட்டு, அது நிறைவேறும்படி விடப்படுமென நான் சிறிதும் எண்ணவில்லை. அம்மாதிரிச் சட்டம் கொண்டுவர கவர்னர் சம்மதிக்க மாட்டார்; அவர் சம்மதியளிக்கவுங் கூடாது. 1935ல் அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை இந்தியா மந்திரி புறக்கணிக்க முடியாது. அந்த வாக்குறுதிகள் இவைதான்; சட்டமோ, சட்டமில்லையோ, திறமையற்ற தொழிலாளர்களைத் தவிர இதர இந்தியர்கள் தாராளமாகப் பர்மா செல்வதைத் தடுக்க எச்சமயத்தும் சர்க்கார் உத்தேசித்ததில்லை; அந்த உத்தேசம் வெளிப்படையாகச் சொல்லப்பட்டது; அனுமதிப்பும் அங்கீகாரமும் அளிக்கும் விஷயத்தில் இந்த வாக்குறுதிகள் பூரணமாக மதிக்கப்படும் என்பதே அந்த உறுதி மொழிகளின் தாத்பரியம். இதுதான் சர்க்காருக்கு இருக்கும் ஒரேவழி என நான் கருதுகிறேன். இத்தக் கருத்துப்படி, இந்த ஒப்பந்தத்தை யொட்டிசட்டமியற்றஇடமில்லையென்பதே எனது தெளிவான அபிப்பிராயம். ஆனால் முடிவில் நடக்க முடியாதது நடந்துவிட்டதென்று வைத்துக்கொண்டால், அவ்வாறு சட்டம் நிறைவேறிவிட்டால், அந்தச் சட்டமும் இந்த ஒப்பந்தத்தைவிட மோசமானதாக இராது. எனக்கு பர்மியர்களிடத்து நம்பிக்கை இருக்கிறது. விஷயத்தைக் கவனமாகப் பரிசீலனை செய்தால் அவர்கள் இந்தியர் மீது நியாயமற்ற கட்டுப்பாடுகளை விதிக்கமாட்டார்கள். அவர்கள் இந்தியர்களைப் புண்படுத்தவோ, அவமதிக்கவோ மாட்டார்கள் என்பது நிச்சயம். அவர்கள் நம்மைக் கைவிட்டால், பர்மா கவர்னரும் கைவிட்டால், நமது இந்தியா கவர்ன்மெண்டும் கைவிட்டால், இந்தியா மந்திரியும் பார்லிமெண்டும் கைவிடுவதாயிருந்தால், அப்பால் நமது அபிப்பிராயங்களைத் திருத்திக்கொள்ள நேரிடும். ஆனால், அத்தகைய நிலை ஏற்படும் எனச் சற்றும் நம்பவில்லை.

ஒப்பந்தத்தின் முழு விவரத்தையும்பற்றி விவாதிக்கப்பட்டிருப்பதால் நான் அதில் புகவில்லை. ஒப்பந்தம் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல. அது அவமதிப்பதாயிருக்கின்றது. அதைத் திருத்தியமைக்க வேண்டியதவசியம். இதில் மிக முக்கியமான ஒரே விஷயம் என்ன வென்றால், இந்திய சர்க்கார் உறுதியுடனிருந்து இந்தியருடைய நியாயமான உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும் என்பதுதான். இத்தேசத்தாரின் உணர்ச்சிகளைக் கவனித்து, இந்திய சர்க்காரும் இந்தியா மந்திரியும் தைரியத்துடனும் விவேகத்துடனும் இப்பிரச்னையைத் தீர்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.



## புதுக்கோட்டைச் செய்திகள்

சபைக்கு அதிகப்படி அதிகாரங்களும் உரிமைகளும் அளிக்கவேண்டுமென்று கோரி அடுத்துகூடும் புதுக்கோட்டை சட்ட சபைக்கு ஒரு தீர்மானம் அனுப்பப்பட்டிருக்கிறது. தேவதாசி முறையை ஒழிப்பது, பெண்களுக்குச் சட்ட சபையில் ஸ்தானம் அளிப்பதற்குத் தனித் தொகுதி ஒதுக்குவதுபற்றியும் வேறு தீர்மானங்கள் கொண்டுவரப்படுகின்றன. புதுக்கோட்டைச் சீப் கோர்ட்டுக்கு ஒரு ஐரோப்பியரைப் பிரதம ஜட்ஜாக நியமிக்கும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்ள ஸ்ரீ யம். யம். ஆர். யம். முத்துக்கருப்பன் செட்டியார் ஒரு தீர்மானம் கொண்டுவருகிறார்.

### வியாபாரிகளுக்கு எச்சரிக்கை

விலை நிர்ணய ஆலோசனைக் கமிட்டியார் நிச்சயித்திருக்கும் விலைகளுக்கு அதிகமாகப் பண்டங்களை விற்கும் வியாபாரிகள் மீது பாதுகாப்புச் சட்டப்படி நடவடிக்கை யெடுக்கப்படுமென்று தர்பார் விசேஷ கெஸட் மூலம் தெரிவித்திருக்கின்றனர்.

### கண்டிராக்டருக்கு நஷ்ட ஈடு

முனிசிபல் சட்டத்துக்கு விரோதமாகப் புதுக்கோட்டை முனிசிபாலிடி பல மோட்டார் பஸ்ஸுகளுக்கு லைசன்சுகள் கொடுத்த காரணத்தால், டோல்கேட் கண்டிராக்டருக்கு 3000 ரூ. நஷ்ட ஈடு கொடுக்கும்படி தர்பார் முனிசிபல் கவுன்ஸிலுக்கு உத்தரவிட்டிருக்கிறது. லைசன்ஸுகளை ரத்து செய்யும்படியும் உத்தரவாகி யிருக்கிறது.

Bleed through

## :: மதிப்புரை ::

### பௌதிக நூல் (முதற் புத்தகம்)

[ஆசிரியர்கள்: ஸ்ரீமான்கள் ஆர். கே. விசுவநாதன் எம். ஏ., வி. என். இராமசாமி பி. எஸ். ஸி. (ஆனர்ஸ்). பக்கம் 770. வெளியிட்டோர்: அண்ணாமலை சர்வகலாசாலையார்.]

பிற பாஷைகளைத் தவிர இதர பாடங்கள் அனைத்தையும்—விஞ்ஞானம் முதலியன உள்பட—தாய் மொழியிலேயே கற்பிக்க வேண்டும் என்ற உணர்ச்சி நாளுக்கு நாள் நம் நாட்டில் வலுத்து வருவது கண்கூடு. பிற மொழி மூலம் பயில்வதால் மாணவர்க்கும் ஆசிரியர்கட்கும் ஏற்படும் சிரமங்கள் பலப்பல. கால விரையமும், பொருட் செலவும் இதனால் அதிகம் ஏற்படுகின்றன என்பதிலும் ஐயமில்லை. தாய் பாஷை மூலம் கற்பதும், கற்றதை எளிதில் உணர்ந்து கொள்ளலும், பிறர்க்குச் சொல்லிக் கொடுப்பதும் எளிது; எனினும் விஞ்ஞானம் போன்ற சாஸ்திரங்களுக்குத் தமிழ் மொழியில் பாடப் புத்தகங்கள் எழுதி விடுவது எளிதல்ல. எனவே, தாய்மொழி மூலம் மாணவர்க்கு எல்லாப் பாடங்களையும் கற்பிக்க வேண்டும் என்ற உணர்ச்சி செயலில் உருவகப்படுதற்கு முக்கிய தடையாக நிற்பது தமிழில் பாடப் புத்தகங்கள் இல்லாக் குறைதான். ஹைஸ்கூல் வகுப்புகளுக்கு உபயோகப் படத்தக்க விஞ்ஞான பாடப் புத்தகங்கள் பல ஏற்கனவே தமிழில் எழுதப்பட்டு பல ஹைஸ்கூல்களில் தமிழ் மொழி மூலமே இப்பாடங்கள் போதிக்கப்பட்டு வருகின்றன. தமிழ் மொழியில் இப்பாடங்களைப் பயின்ற மாணவர்கள் காலேஜ் வகுப்புகட்குச் செல்லும்போது அங்கும் அப்பாடங்களைத் தமிழ் மொழி மூலமே கற்பதற்கு உபயோகமாகப் பாடப் புத்தகங்கள் வேண்டுமன்றோ? பௌதிக சாஸ்திரத்துக்கு இண்டர்மீடியட் வகுப்புக்கு வேண்டிய தமிழ்ப் புத்தகம் இதுவரை இல்லாதிருந்தது. இக்குறையை நீக்க அண்ணாமலை யூனிவர்ஸிட்டியார் முன் வந்தனர். இண்டர்மீடியட் வகுப்புக்குத் தக்கதொரு பௌதிக நூலைத் தமிழில் எழுதுபவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசளிப்பதாகப் பிரசுரம் செய்தனர். மூன்று புத்தகங்கள் சமர்ப்பிக்கப்பட்டதில் ஒன்றைத் தக்கதெனப் பொறுக்கிப் பரிசளித்தனர். அதையே இப்போது சர்வகலாசாலையார் அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர். இதன் மூலம் அண்ணாமலை சர்வகலாசாலையார் தமிழுக்கு அரிய தொண்டு செய்திருக்கின்றனர் என்பதில் சந்தேகமில்லை. அவர்களது இவ்வுயரிய பணி மகிழ்ச்சியுடன் பாராட்டத்தக்கதாகும்.

இந்நூலை எழுதியுள்ள ஆசிரியர்கள் இருவரும் பௌதிகத்திலும் தமிழிலும் நல்ல பாண்டித்தியம் பெற்றவர்கள். அவர்கள் பெரு முயற்சி செய்து, விஞ்ஞானத்தில் உபயோகிக்கப்படும் பற்பல கடினமான பதங்களுக்கும், கூடிய மட்டும் சமமான, எளிதில் விளங்கக் கூடிய தமிழ்ப் பதங்களைக் கண்டு பிடித்திருக்கின்றனர். அவர்கள் உபயோகித்துள்ள தமிழ்ப் பதங்களும் அவற்றிற்கு நேரான ஆங்கிலப் பதங்களும் 'சொல்லகராதி' என்ற தலைப்பில் தனியாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு பாஷையிலிருந்து மற்றொரு பாஷைக்கு மாறும்போது ஆரம்பத்தில் கொஞ்சம் கஷ்டமாகத்தானிருக்கும். ஆனால், காலக்கிரமத்தில், தமிழ்ப் பதங்களின் உபயோகம் அதிகப்பட அதிகப்பட, கற்போருக்கும் கற்றுக்கொடுப்போருக்கும் சிரமம் குறைந்து வரும். இப்புது முயற்சி எதிர் காலத்தில் நல்ல பலனளிக்கும் என்பதில் ஐயமில்லை, தமிழ் நாட்டில் விஞ்ஞான அறிவு எளிதில் விரைவாகப் பரவுவதற்கு இது ஏதுவாக இருப்பதுடன், இன்னும் இது போன்ற பல நூல்கள் தைரியமாய் வெளிவர நல்ல தூண்டுகோலாகவும் இருக்கும் என நம்புகின்றோம். இதில் இயக்கவியல் (Dynamics) முதல் வெப்பவியல் (Heat) வரை அடங்கியுள்ளன. மாணவர்க்கு உதவியாயிருக்கும் பொருட்டு ஆங்காங்கே, சென்னை, பம்பாய், அண்ணாமலை முதலிய சர்வகலாசாலைகளின் பரீட்சை வினாக்களும் அவற்றிற்கான விடைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புத்தகம் நல்ல காகிதத்தில் செவ்விய முறையில் அச்சிட்டுத் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

### அவன் அமரன்

[ஆசிரியர்: ஸ்ரீ அ. சீனிவாசராகவன் எம். ஏ. பக்கம்: 32. விலை: அணா 4. கிடைக்குமிடம்: நவயுகப் பிரசுராலயம், ஜி. டி. சென்னை].

இது மகாகவி கம்பனைப்பற்றிய ஒரு சிறிய நாடகம். சென்ற பங்குனி மாதம் நடைபெற்ற கம்பன் விழாவின்போது, இந்நாடகம் திருச்சி ரேடியோ நிலயத்தில் நடிக்கப்பெற்று ஒலிபரப்பப்பட்டது. "கவியுள்ளம் படைத்த ஒருவன்—அவனுக்குச் சாவு வருகிறது. அவனுடைய கடைசி நாளையும், அப்போது அவனுக்கு ஏற்படும் பழைய நினைவுகளையும் சித்திரிக்க முயல்கிறது இந்த நாடகம்". அம்பிகாபதியின் துயர வாழ்க்கை சாவிலே கலந்த பின், சோழனுடைய சபையை விடுத்து, நாட்டரசன்கோட்டையில் இருந்த ஒரு சிற்றரசன் ஆதரவில் கம்பன் வசித்து வந்தான். அங்கேதான் சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன் இறந்தான். இந்த விஷயங்களை அடிப்படையாகக்கொண்டு ஆசிரியர் தமது கற்பனா சக்தி மூலம் இதைச் சிருஷ்டித்திருக்கிறார். இடையிடையே, சந்தர்ப்பத்துக் கேற்றாற்போல், கம்பன் கவி மலர்களையே ஆசிரியர் தொடுத்து இசைத்திருப்பது படிக்கப் படிக்க இன்பம் பயப்பதாக இருக்கிறது. கம்பனுக்கேற்ற உயர்ந்த நடை.

வாழ்வின் இறுதி சமீபித்து விட்டது. அந்த நேரத்தில், கவிதையிலும் கலையிலும் தன்னை இழந்த பக்குவமான உள்ளத்தில், முன்கால நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாகத் தோன்றி மறைகின்றன. கம்பன் சடையப்ப வள்ளலை நினைக்கின்றான். திருவரங்கம் பெரிய கோவில், உறையூர்க் கோட்டை, இராமாயண அரங்கேற்றம் எல்லாம் அகக் கண்ணில் படுகின்றன. அம்பிகாபதியை எண்ணி உருகுகின்றான். இராவணனுடன் போரிட்டு ஜடாயு தெய்வமரணம் எய்தியதாகச் சொல்லும் கவியைப் படிக்கக் கேட்டுக்கொண்டேயிருக்க, அந்த மகாகவியினுடைய உயிரும் பிரிந்து விடுகின்றது. 300 வருடங்கட்குப் பிறகு. கம்பராமாயணத்தில் இரணியன் வதைப்படலத்திலிருந்து சில இனிய பாடல்களைத் தெரிந்தெடுத்து பாண்டியனுடைய சபாமண்டபத்தில் பார்வதி எனும் நடனப்பெண் அவற்றிற்கு அபிநயம் பிடிக்கும் காட்சியைப் படிக்கிறோம். அதைத் தொடர்ந்து பழயபடி நாட்டரசன் கோட்டைக்கே வருகிறோம். அங்கே கம்பன் திருநாளில் சிறந்த பிரசங்கங்கள் நடக்கின்றன. விபீஷணனைக் கம்பன் வருணித்த முறையைப் பற்றிய பிரசங்கத்தை ரேடியோ நிலயத்தார் ஒலிபரப்புகிறார்கள். இப்படியாக ஆசிரியர் கம்பன் வாழ்ந்த காலத்தையும், இன்று அவன் திருநாள் கொண்டாடும் காலத்தையும் தொடுத்துத் தமது கற்பனா சக்தி மூலம் அவன் அமரன் என்பதை நிரூபித்துக் காட்டுகிறார். கம்பன் வாழ்க! என்ற ஒலியுடன் நாடகமும் முடிகிறது. இந்நாடகத்தில் வரும் பாடல்களுக்கு ஏற்ற ராகங்களும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சுவைமிக்க இச்சொல் சித்திரத்தை எல்லோரும் படித்தின்புறலாம். பள்ளிக்கூடங்களில் நடிக்கவும் செய்யலாம்.

### பாரதியார் படம்

தேசத்திற்குப் புதிய ஜீவனை ஊட்டியவர் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார். சமூகத் துறையிலும் அரசியல் துறையிலும் அவர் தம் பாடல்களால் ஒரு பெரிய புரட்சியையே உண்டுபண்ணிவிட்டார். அவரது பாடல்கள் இன்று நாடு முற்றும் ஒலிக்கின்றன. பள்ளிக்கூடங்களிலும், இன்னிசைக் கச்சேரிகளிலும் பாரதியார் பாடல்கள் தேசிய மணத்தை வீசக் காண்கின்றோம். அவரது பாட்டைக் கேட்டின்புறாத பாமரரும் பண்டிதரும் கிடையாது. அவரது நூற்கள் இல்லாத புத்தகநிலையமே இல்லை யெனலாம். தமிழ் நாட்டைத் தட்டி யெழுப்பிய இந்த மகாகவியின் படம் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்கவேண்டியது அவசியமன்றோ? சென்னை நவயுகப் பிரசுராலயத்தார் பாரதியார் படத்தை (உருவத்தின் மேற் பகுதியை மட்டும்) வர்ணத்தில் அழகுறத் தீட்டி அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர். பாரதியாரின் வழக்கமான வெள்ளை முண்டாசுக்கட்டு, நீலக்கோட்டுடன் இப்படம் திகழ்கின்றது. பார்ப்போர் மனத்தை ஊடுருவிச் செல்லும் பார்வையுடன் முகத் தோற்றம் பொலிகிறது. இவ்வளவு திறமையுடன் உருவத்தைச் சித்திரித்திருப்பவர் ஸ்ரீ ஆரியாவாகும். படத்தின் அளவு 16"x12". சக்தி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. விலை அணா எட்டுத்தான். இப்படம் ஒவ்வொரு வீட்டிலுமிருக்கவேண்டியது அவசியம் என்று சொல்லத் தேவையில்லை.









## தமிழிசை இயக்கம்பற்றி ஸ்ரீ அரியக்குடி

சங்கீத வித்வான் ஸ்ரீமான் அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் 'சுதேசமித்திரன்' நிருபரிடம் தெரிவித்ததாவது:—

"தமிழ்நாட்டைச் சேர்ந்தவன் என்ற முறையில் தமிழ் இசை வளர்ச்சியில் அக்கரை கொண்டவர்களில் நானும் ஒருவன். ஆனால் தமிழ் பாட்டுக்கும், தெலுங்குப் பாட்டுக்கும் ஸம அந்தஸ்து அளிக்க வேண்டுமென்பது என்னுடைய கருத்து. தமிழ் பாட்டுகளைத் தவிர தெலுங்குப் பாட்டுகளே பாடக்கூடாதென்று ஒருவர் என்னைச் சொன்னால், நான் அந்தக் கச்சேரிக்குப்போகச் சம்மதிக்கமாட்டேன். மேலும் சங்கீத விஷயத்தில் வித்வான்களின் மனப்போக்குப்படி விட்டுவிட வேண்டும். கட்டுப்பாடு கூடாது. ஸ்ரீமான் எஸ். வி. ராமமூர்த்தி (சென்னை சர்க்கார் பிரதம காரியதரிசி) சமீபத்தில் இது விஷயமாகச் சொன்ன அபிப்பிராயத்தை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். இந்த இயக்கத்தால் ஆந்திர தேசத்தில் தமிழ் நாட்டு சங்கீத வித்வான்களைப் பகிஷ்கரிப்பதான ஒரு இயக்கம் ஏற்படுமோ வென்று கூட நான் அஞ்சவேண்டி இருக்கிறது."

### ஸ்ரீ ரா. ப. ராமசாமி சத்தியாக்கிரகம்

மானமதுரைத் தாலூகா ஹரிஜன சங்கக் காரியதரிசி திரு ரா. ப. ராமசாமி அவர்கள் 10-1-41ல் முதல் முறை சத்தியாக்ரகம் செய்து 9 மாதக் கடுங்காவல் தண்டனை பெற்று 9-9-41ல் அலிப்புரம் சிறையிலிருந்து விடுதலையானார். இவர் மீண்டும் சத்யாக்ரகம் செய்தால் ஹரிஜன வேலைகள் சரிவர நடைபெருவென்று, அவருக்கு விலக்களிக்க வேண்டி ஷை ஹரிஜன சங்கத்தார், தமிழ்நாடு ஹரிஜன சங்கத்தலைவர் மூலம் மகாத்மா காந்தியைக் கேட்டுக் கொண்டார்கள். ஸ்ரீ ஏ. வைத்திய நாதய்யர் அவர்கட்கு ஸ்ரீ மகாதேவ தேசாய் அனுப்பியிருக்கும் பதிலில், அவரது ஊழியம் தேவைப்பட்டால் முதலிலேயே அவர் சத்யாக்ரகத்துக்குப் போகாமல் நிறுத்தியிருக்க வேண்டு மென்றும், ஒரு முறை சத்யாக்ரகம் செய்தவர் மறுமுறையும் சத்யாக்ரகம் செய்யத் தயாராயும், தகுதியுள்ளவராயு மிருந்தால் அவ்வரை நிறுத்துவது தவறென்று காந்திஜி கருதுவதாயும், எனவே ஸ்ரீ ராமசாமி மீண்டும் போகத் தயாராயிருந்தால் அவரைத்தடுக்க வேண்டாமென்றும் குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீ ராமசாமி 22-11-41ல் மானமதுரையில் மறுமுறை சத்யாக்ரகம் செய்வார் என்றுதெரிகிறது.

### பிள்ளையார்பட்டி

முத்தழகு அவர்கள் திருப்பத்தூர் தாலுக்காவில் சில கிராமங்களில் யுத்த கோஷம் செய்து பிரசாரம் செய்து வருகிறார். இதுவரை 80 மைல்கள் நடந்து 53 கிராமத்தைச் சுற்றி 9—11—41ல் குன்னக்குடி போய்ச் சேர்ந்தார். இரண்டு தின ஓய்வுக்குப் பின் நமது தாலுகாவில் இன்னும் பத்து தினங்கள் சுற்றிவிட்டு மேலும் டில்லி நோக்கி யாத்திரை தொடங்குவார். இவருடன் சிறுகூடல்பட்டி சத்யாக்கிரஹி அள. குப்பான், தொண்டர் மாணிக்கம். அறந்தாங்கி டி. எஸ். வீரராகவன் இவர்களும் பிரயாணம் செய்தார்கள்.

### ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு சுதந்திரம்

சட்ட சபை வேலை சம்பந்தமாக அவரது கொள்கையை எடுத்துச் சொல்லிப் பிரசாரம் செய்ய மகாத்மா காந்தி சுதந்திரம் அளித்திருப்பதாகத் தெரிகிறது.

### கல்யாணகாலங்களில் சிக்கனம்

கல்யாணம் முதலிய சுப காரியங்களில் மோட்டார், குதிரை முதலிய வாகனாதிகளையும், வாணவேடிக்கை மேளவாத்தியம் சதுர் முதலியவற்றையும் முஸ்லிம்கள் யாரும் உபயோகிக்கக் கூடாதென்று ராமநாதபுரம் தாலூகா சித்தார்க்கோட்டை முஸ்லிம் தர்ம பரிபாலன சபைக் கமிட்டியார் தீர்மானித்திருக்கிறார்கள்.

## 32 லக்ஷம் ரூபாய் வருமான வரி

### கல்கத்தாவில் ருசிகரமான வழக்கு

கல்கத்தாவில் ஒரு வருஷத்துக்கு வருமான வரியாக 32 லக்ஷம் ரூபாய் செலுத்தும்படி ஒரு பிரபல ஹிந்து வர்த்தகர் ஒருவருக்கு உத்தரவிடப்பட்டது. இந்த வரி விதிப்பு அநீதமானதென்று நகரிலுள்ள வர்த்தக சமூகத்தினர் கருதி இந்திய வியாபாரிகள் சங்கக் கூட்டத்தில் அதிகாரிகளின் எதேச்சாதிகாரத்தையும், அவர்கள் வரி விதிப்பு சம்பந்தமாகக் காட்டும் ஜாதி வேற்றுமையையும் பலமாகக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. வருமான வரி இலாகா அனுஷ்டித்து வரும் நடைமுறை சம்பந்தமாக தங்களுக்குள்ள குறைகளை எடுத்துச் சொல்ல இந்திய வர்த்தகர்கள் தூது கோஷ்டி ஒன்று பொக்கிஷ மெம்பரைக் காணும் என்று சொல்லப்படுகிறது. மேற்படி வரி விதிப்பு விஷயமாக நிர்வாக சபை அங்கத்தினர்களுக்கு ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஷை இலாகாவின் நடைமுறையைக் கண்டிப்பதற்காக இந்திய வர்த்தக ஸ்தாபனங்கள் பல நாட்களுக்கு ஹர்த்தால் அனுஷ்டித்து வருவதாகவும் சொல்லப்படுகிறது.

## தியோலி கைதிகள் உண்ணாவிரத நிறுத்தம்

### ஸ்ரீமான் ஜோஷி அறிக்கை

தியோலி கைதிகளில் 184 பேர் இப்போது உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டுவிட்டனர். இன்னும் 46 பேர் உண்ணா விரதம் அனுஷ்டித்து வருகின்றனர். இவர்களில் ஜெயப்பிரகாஷ் நாராயணரும் ஒருவர். உண்ணாவிரதம் சம்பந்தமாக மத்திய சட்டசபையில் நடந்த விவாதத்தின் பலனாலும், ஸ்ரீமான் ஜோஷி சர்க்கார் அனுமதி பெற்று தியோலி சிறைக்குச் சென்று உண்ணா விரதிகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தியதின் பலனாகவும் உண்ணாவிரதம் நிறுத்திவைக்கப்பட்டது. இது சம்பந்தமாக ஸ்ரீமான் ஜோஷி வெளியிட்ட ஒரு அறிக்கையில், சட்டசபை அங்கத்தினர்களும், பொது மக்களும் காவற் கைதிகளின் குறைகளை அனுதாபத்துடன் கவனித்திருப்பதாகவும், சர்க்கார் அதிகாரிகள் கைதிகளின் குறைகள் விஷயத்தில் தீவிரமாக அனுதாபத்துடன் கவனித்துவருவதாகவும், சீக்கிரத்தில் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்துவிடுவார்களென்றும் அவர் காவற் கைதிகளுக்கு எடுத்துச் சொல்லி உண்ணா விரதத்தை நிறுத்திவிட வற்புறுத்தியதாகவும் கூறியிருக்கிறார்.

தியோலி காவற் கைதிகள் உண்ணாவிரதத்திற்கு அனுதாபம் தெரிவித்து நாட்டின் பல பாகங்களிலும் உண்ணாவிரத தினம் நடைபெற்றது. மகாத்மா காந்தி, ஸ்ரீமதி ராமேஸ்வரி நேரு, ஹிந்து மகாசபைத் தலைவர் ஸ்ரீ வி. டி. சவர்க்கார் ஆகியோர் அனுதாபம் தெரிவித்திருக்கின்றனர்.

சட்ட சபைக் காங்கிரஸ் கட்சி பிரதம கொறடாவாகிய ஸ்ரீ சத்திய நாராயண சின்ஹா, டாக்டர் ராஜேந்திர பிரசாத் ஆகியோர் ஸ்ரீ ஜெயப்பிரகாசருக்கு உண்ணா விரதத்தை நிறுத்தி விடும்படி தந்தி யடித்திருக்கின்றனர். ஸர்தார் மங்கள சிங் தியோலி விடுதிக்குச் சென்று இன்னும் உண்ணாவிரத மிருப்பவர்களை உண்ணாவிரதத்தை நிறுத்தும்படி வற்புறுத்துவார் என்று தெரிகிறது.





## ஸ்ரீ கரு. முத்து. சிவலிங்கம் கைது

ராமநாதபுரம் ஜில்லா போர்டு மெம்பரும் தீவிரக் காங்கிரஸ் வாதியுமான ஆத்திக்காடு, தெக்கூர் ஸ்ரீ கரு. முத்து. சிவலிங்கம் செட்டியார் தமது கிராமத்தில் 31—10—41-ல் சத்தியாக்கிரகம் புரிந்து கைது செய்யப்படாததால் திருப்பத்தூர், மேலூர் தாலுக்காக்களில் பல இடங்களில் பிரசாரம் செய்துவிட்டு நவம்பர் 2-உ மதுரை போய்ச் சேர்ந்தார். அன்று மாலை மதுரை மேங்காட்டுப் பொட்டலில் நடந்த கூட்டத்தில் கைது செய்யப்பட்டு மதுரை நகர மாஜிஸ்திரேட் உத்திரவுப்படி ரிமாண்டில் வைக்கப்பட்டிருக்கிறார்.

### ஸ்ரீ லெட்சுமணன் செட்டியார் விடுதலை

கண்டரமாணிக்கம் திரு. ராம. கா. லெட்சுமணன் செட்டியார் நான்கு மாதத் தண்டனையை அலிபுரம் சிறையில் கழித்துவிட்டு 8-11-41 காலை விடுதலை அடைந்தார். 13-11-41-ல் கண்டரமாணிக்கம் வந்து சேருவார்.

### விற்பனை வரிச் சட்ட வழக்கு

#### சமஷ்டிக் கோர்ட்டுக்கு அப்பீல்

முதல் விற்பனை சம்பந்தப்பட்ட வரை விற்பனை வரிச் சட்டம் செல்லாதென சென்னை ஹைகோர்ட்டு செய்த தீர்ப்புக்கு மேல் சமஷ்டிக் கோர்ட்டுக்கு அப்பீல் செய்ய அனுமதி கோரி சர்க்கார் மனு தாக்கல் செய்து கொண்டனர். அனுமதி யளிக்கப்பட்டிருக்கிறது.

### தேவகோட்டை சப் ஜட்ஜ்

மன்னார்குடி ஜில்லா முன்சீப் ஸ்ரீ வி. யன், ராமநாதராவ் தேவகோட்டை சப்ஜட்ஜாகவும், ஸ்ரீ பி. மார்க்கண்டேயலு எல்லூர் அடிஷனல் சப்ஜட்ஜாகவும் மாற்றப்பட்டிருக்கிறார்கள்.

### ஒரிஸ்ஸாவில் மீண்டும் மந்திரி சபை அமைக்க முயற்சி

#### ஸ்ரீ கோதாவரி மிஸ்ரா கோஷ்டிக்கு சர்தார் பட்டேல் கட்டளை

ஒரிஸ்ஸாவில் மீண்டும் மந்திரி சபை அமைக்கும் ரகசிய ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இது சம்பந்தமாக காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டுத் தலைவர் சர்தார் படேல் பண்டித கோதாவரி மிஸ்ராவுக்கும் இன்னும் அவரைச் சார்ந்த ஒன்பது அங்கத்தினர்களுக்கும் தங்கள் அஸெம்பிளி ஸ்தானங்களை உடனே ராஜிநாமாச் செய்யும்படி தந்தி யனுப்பியிருக்கிறார். மேற்படி மந்திரி சபை அமைப்பது சம்பந்தமாக நடந்துவரும் விஷயங்களை உத்கல் மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பிராண கிருஷ்ணபதியாரி மகாத்மாவுக்கு எழுதிய கடிதத்துக்கு காந்திஜி, அவர்களை ஜனங்கள் பொருட்படுத்தமாட்டார்களென்றும் காங்கிரஸில் உண்மை தவறி நடப்பவர்கள் அதைவிட்டு விலகிவிட வேண்டுமென்றும் எழுதியுள்ளார்.

### இந்தோ சீனவில் ஜப்பான் படை

தற்போது இந்தோ சீனவில் 1,20,000 ஜப்பானிய சிப்பாய்கள் இருக்கின்றனராம்.

குமரன்

காரைக்குடி
விஷு-வூ ஐப்பசி மீ 28உ

## ஹிட்லர் - சர்ச்சில் பிரசங்கம்

இந்த வாரத்தில் மூன்று முக்கியமான பிரசங்கங்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஸ்டாலின், ஹிட்லர், சர்ச்சில் ஆகிய மூவரும் ஒருவர் பின் ஒருவராக யுத்த நிலைமைபற்றிப் பேசியிருக்கின்றனர். இன்றைய யுத்த நிலையையும், யுத்தத்தின் எதிர்காலப் போக்கு எவ்வாறு இருக்கக்கூடு மென்பதையும் இந்த மூன்று பிரசங்கங்களி லிருந்து ஒருவாறு ஊகித்துக்கொள்வது கஷ்டமல்ல.

வழக்கம் போல் இவ் வருஷமும் ஹிட்லர் மியூனிச் சாராயக் கிடங்கில் தமது வீரப் பிரதாபங்களைக் கொட்டி முழக்கியிருக்கிறார். இந்த டம்பப் பேச்சில் ரஷியர் அடைந்துள்ள சேதங்களைப் பற்றி அவர் வெளியிட்டுள்ள புள்ளி விவரங்கள் யாரையும் பிரமிப்படையச் செய்யும். இதுவரை 36 லட்சம் ரஷ்யரைச் சிறைப் பிடித்திருக்கிறாராம். பிடிபட்ட ரஷ்யப் பிரதேசமோ இங்கிலாந்தைப் போல் ஐந்து மடங்கு விஸ்தீரணமிருக்குமாம்! ஜனநாயகத்துக்கு எதிரான போல்ஷிவிக்கோஷ்டியை ஒழிக்க ஐரோப்பா முழுவதும் ஒரு முகமாக நின்று போராட முன்வந்திருக்கிறதாம்! அவர் தம்மாலான வரை சமாதானத்தை நிலைநாட்ட முயன்றும் எதிரிகளது பிடிவாதத்தால் அவர் முயற்சி உருப்படாமல் போய்விட்டதாம்! சுமார் ஒரு கோடி ரஷ்ய வீரர்களைப் போர் புரிய முடியாமல் காயப்படுத்தி விட்டார்களாம்! நாஜிகளுக்கு இயல்பாகவுள்ள புளுகு மூட்டைதான் இது. இதைக் கேட்டு ஜர்மானியர் சந்தோஷ முறலாம்; ஆனால் பிறர் ஏமாறுவார்கள் என்றெண்ணுவது பெரிய ஏமாற்றந்தான். இந்தப் பேச்சில் ஹிட்லரின் பலவீனமும், ருஷ்யரின் எதிர்ப்பு சக்தியும் நன்கு புலனாகின்றன. ஹிட்லரே சொல்லியிருக்கிறார் "இவ்வளவு மகத்தான சேதத்திற்குப் பின் எந்த ராணுவமும் போர் புரிவதற்கில்லை" யென்று. அப்படியாயின் ரஷ்யா இன்னும் தீவிரமாகப் போர் புரிவதேன்? ரஷ்யர்கள் இவ்வளவு உறுதியுட னிருப்பதேன்?

ரஷ்யரின் உறுதியும் சக்தியும் ஹிட்லர் நினைப்பதுபோல் அவ்வளவு சாமானியமானவையல்ல. பல இடங்களில் அவர்கள் திருப்பித் தாக்கி வருகின்றனர். ஒன்றரை மாதத்தில் ரஷ்யாவைப் பணியச் செய்து விடுவோமென நாஜிகள் பறை சாற்றினர். ஆனால் இன்று நாலரை மாதங்களாகியும் ரஷ்யர் உறுதி குலையவில்லை. ரஷ்யா அடைந்துள்ள கஷ்டங்கள் ரஷ்யாவைப் பலவீனப் படுத்தவில்லை; ஆனால் இன்னும் அதிகமாகப் பலப்படுத்தியிருக்கின்றனவென்று ஸ்டாலின் கூறியிருப்பது உண்மையன்றோ? ஜர்மானியர் இன்னும் அதிகமான தியாகத்திற்குத் தயாராயிருக்க வேண்டுமென்று ஜர்மன் அதிகாரிகளே தம் படையினருக்கு அடிக்கடி எச்சரிக்கை விடுத்து வருகின்றனர். ரஷ்யாவை ஐரோப்பா முழுவதும் ஒரு முகமாக எதிர்ப்பதாக ஹிட்லர் சொல்கிறார். ஆனால், அவர் பிடித்த நாடுகளில் மக்கள் அடக்கப்படும் முறையும், ஆங்காங்கே எதிர்ப்புகள் தலை காட்டுவதும் உலகறிந்தனவாகும். ஹிட்லரின் "சமாதான" முயற்சிக்கு இவை தக்க சான்றுகளாகும்!

பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் சர்ச்சில் லண்டன் மேயர் விருந்தில் நிகழ்த்திய பிரசங்கத்தில் இறுதிவரைப் போராடி ஹிட்லரை முறியடிப்பதில் பிரிட்டிஷாரும் நேச தேசத்தாரும் கொண்டுள்ள அசைக்க முடியாத உறுதியைக் காண்கின்றோம். அப்பிரசங்கத்தின் முக்கிய அம்சங்கள் இரண்டு: ஒன்று ஜப்பானுக்கு விடுத்த எச்சரிக்கை; மற்றொன்று நாஜியரின் சமாதான வெருட்டலுக்குரிய பதில். பஸிபிக்கில் சமாதானத்தை நிலைநாட்ட யுனைடெட் ஸ்டேட்ஸ் செய்யும் முயற்சி பலிக்காமல் போய், அது காரணமாக அமெரிக்கா ஜப்பானுடன் யுத்தம் செய்ய நேருமாயின் அதே சமயத்தில் பிரிட்டனும் யுத்தப் பிரகடனம் வெளியிடும் என்று அவர் கூறியிருக்கிறார். சில காலமாக ஜப்பான் எங்காவது ஓரிடத்தில் பாய்வதற்குத் தயாராயிருப்பதாகச் செய்திகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. சமீபத்தில் இந்தோ சீனவுக்குள் ஜப்பானியப் படை ஏராளமாகத் திரட்டிவைக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இது எந்த தேசத்தின் மீது பாயும் என்று தெரியவில்லை. அமெரிக்காவை விட்டு, சீனமீதோ, தாய்லாந்து மீதோ பாய்ந்தால் நேசநாடுகள் நடவடிக்கை யெடுக்குமா என்பது சர்ச்சில் கூற்றிலிருந்து தெளிவாகவில்லை. இரு தேசங்களும் சேர்ந்து தங்கள் திட்டமான நோக்கத்தை ஜப்பானுக்கு அறிவுறுத்தினால் தான் ஜப்பானுடைய யுத்த முஸ்திபுகள் ஓயும்.

"ரஷ்ய எதிர்ப்பை முறியடித்து விட்டோம்; வருஷ முடிவில் வெற்றி நமதே" என்று வீராப்புப் பேசும் ஹிட்லருக்கு சர்ச்சிலின் கூற்று தக்க பதிலாக இருக்கிற தென்பதி லையமில்லை. ஹிட்லருடனோ, நாஜி ஆட்சியின் பிரதிநிதிகளாயுள்ள வேறு எந்த ஜர்மன் கட்சியுடனோ பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு போதும் சமரசம் பேசப் போவதில்லை யென்று அவர் திட்டமாகக் கூறிவிட்டார். "நமது நேச நாடான ரஷ்யாவுக்கும் யுனைடெட் ஸ்டேட்ஸுக்கும் நமக்குள்ள கடமையை முன்னிட்டு இங்ஙனம் தெளிவாக அறிவிக்க வேண்டியது நமது கடமை" என்று அவர் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. மிஸ்டர் சர்ச்சிலின் இக்கூற்று, ரஷ்யப் போருடன் யுத்தத்தை முடித்து ஓய்வு பெறலாமென்ற ஜர்மானியருக்குக் கலக்கத்தையும், தீவிரமாகப் போராடி வரும் ருஷ்யர்களுக்கு ஊக்கத்தையும் ஊட்டும் என்பதில் ஐயமில்லை.

## உள்ளூர்ச் செய்திகள்

### நகர சபைக் கூட்டம்

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று நவம்பர் 14உ வெள்ளிக்கிழமை மாலை 4 மணிக்கு "காந்தி மாளிகை"யில் நடைபெறும்.

### தேநீர் விருந்து

செட்டியார்கள் நலஉரிமைச் சங்க அங்கத்தினர் ஸ்ரீ வீர. கண்ணப்ப செட்டியார் மலாய்நாடு செல்வதை முன்னிட்டு 9-11-41 மாலை 4-30 மணிக்கு சங்க நிலையத்தில் தேநீர் விருந்து நடத்தி அவருக்கு மாலை அணிவித்து வழி அனுப்பினர்.

### தியோலி உண்ணுவிரதத்துக்கு அனுதாபம்

சென்ற ஞாயிற்றுக் கிழமை (9-11-41) மாலை 6 மணிக்குக் காந்தி சதுக்கத்தில் காரைக்குடி தேசிய வாலிபர் சங்கத்தின் ஆதரவில் தியோலி உண்ணுவிரத தினம் நடைபெற்றது. டாக்டர் எஸ். சுப்பிரமணியம் தலைமை வகித்தார். திருவாளர்களான உன்னிகிருஷ்ணன், சீனிவாசன் ஆகியோர் தியோலி கைதிகள் உண்ணுவிரதம் எடுத்துக் கொள்ள நேர்ந்த காரணத்தைப் பற்றியும், அவர்களுடைய கோரிக்கைகளைப்பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். தியோலிக் கைதிகளின் கோரிக்கைகளுக்குச் செவி சாய்த்து அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கும் உண்ணுவிரதத்தை நிறுத்துவதற்கான முயற்சியைச் செய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது.

## ஸ்ரீ சுபாஷ் போஸ் பர்லினில் இருக்கிறார்?

### ராஜாங்க சபையில் சர்க்கார் மெம்பர் அறிவிப்பு

ராஜாங்க சபையில் ஸ்ரீ சுபாஷ் போஸைப்பற்றிக் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு உள்நாட்டிலாகா காரியதரிசி மிஸ்டர் கான்ரன் ஸ்மித் பதிலளிக்கையில் குறிப்பிட்டதாவது:—

"சுபாஷ் பாபு ரோமிலோ அல்லது பெர்லினிலோ இருக்கிறார் என்று காட்டும் சில துண்டுப் பிரசுரங்கள் சர்க்காருக்குக் கிடைத்திருக்கின்றன. அவர் எதிரிகளின் ஐந்தாம் படையில் சேர்ந்து இந்தியாமீது ஜெர்மனி படையெடுப்பதில் உதவி செய்யும் வகையில் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவர் எதிரிகளுடன் சேர்ந்துவிட்டாரென்பதில் சந்தேகமில்லை". இந்தியாவில் உள்ள புரட்சிக் கட்சியுடன் அவர் நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொண்டிருப்பதாயும், ஏற்கனவே அவர் கையொப்பத்துடன் அறிக்கை வெளியிட்டிருப்பதாயும், சில அந்நிய நாடுகளும் மும்மரமாக வேலை செய்துவருவதாக இத்துண்டுப் பிரசுரங்களில் காணப்படுவதாகவும், ஆனால் அவர் எவ்வாறு பெர்லின் அல்லது ரோம் போய்ச் சேர்ந்தார் என்பதுபற்றிய தகவல் தெரியவில்லை என்றும் ஒரு உப கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது.

ஸ்ரீ சுபாஷ் போஸ்

### சென்னை மேயர் தேர்தல்

நவம்பர் 11உ நடைபெற்ற சென்னை கார்ப்பரேஷன் கூட்டத்தில் ஸ்ரீ வி. சக்கரைச் செட்டியார் மேயராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### டிப்டி மேயர்

ஸ்ரீ யன். கோபாலமேனன் டிப்டி மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருக்கு 36 ஓட்டுகளும், அவரோடு போட்டியிட்ட ஸ்ரீ பி. கே. விநாயக முதலியாருக்கு 22 ஓட்டுகளும் கிடைத்தன.

### சத்தியாக்கிரகம்

சென்ற திங்கட்கிழமை மாலை 6 மணிக்குக் காந்தி சதுக்கத்தில் சிறுகூடற்பட்டிக் காங்கிரஸ் தொண்டர் ஸ்ரீ செ. பள. அள. குப்பன் செட்டியார் சத்தியாக்கிரகம் செய்தார். அவர் 30-10-41ல் கீழச்சிவற்பட்டியில் முதன் முதல் சத்தியாக்கிரகம் செய்த கைது செய்யப்படாததால் கிராமங்கள் தோறும் கால்நடையாகப் பிரசாரம் செய்து கொண்டு வருகிறார். இதுவரை 51 கிராமங்களில் பிரசாரம் செய்திருக்கிறார்.

### வேண்டுகோள்

1941-ம் வருஷத்திற்குக் காங்கிரஸ் அங்கத்தினர்களாக நகர மக்கள் தங்களது பெயர்களைப் பதிவு செய்து கொள்ளுமாறு காரைக்குடி நகர சத்தியாக்கிரஹக் கமிட்டிக் காரியதரிசி பழ. வெங்கிடாசலம் அறிவிக்கிறார்.

## ஸ்வீகாரப் பிள்ளையின் சொத்துரிமை

### சென்னை ஹைகோர்ட் தீர்ப்பு

மதுரை ஜில்லாவைச் சேர்ந்த ராமசாமிப் பிள்ளை என்பவருக்கு இருந்த நான்கு பிள்ளைகளில் இருவர் சந்ததி இன்றி இறந்து போகவே மற்ற இருவரும் சொத்தைப் பாகம் செய்து கொண்டுவிட்டனர். இதற்கு மேல் இறந்த பிள்ளைகளின் விதவைகள் ஸ்வீகாரம்செய்து கொண்டார்கள். அந்த ஸ்வீகாரப் பிள்ளைகளில் ஒருவர் குடும்பச் சொத்தில் பாகம் கோரி தமது சுவீகாரத் தகப்பனாரின் சகோதரர்மீது வழக்குத் தொடுத்தார். சுவீகாரம் செல்லாதென்றும், சொத்து பாகமான பின் ஸ்வீகாரம் நடந்ததால் சொத்துரிமை கிடையாதென்றும் பிரதிவாதிகள் தரப்பில் வாதாடப்பட்டது. கீழ்க்கோர்ட்டுகள் ஸ்வீகார புத்திரனுக்குச் சொத்தில் பாகம் பெற உரிமையுண்டெனத் தீர்ப்புச் செய்தன. இத் தீர்ப்புகளை ஆட்சேபித்து ஹைகோர்ட்டில் அப்பீல் கொண்டுவரப்பட்டது.

ஹைகோர்ட்டில் வழக்கை விசாரித்த நீதிபதி ஜஸ்டிஸ் வெங்கடாமண ராவ் அப்பீலைத் தள்ளி, கணவன் இறக்கும்போது மனைவி கர்ப்பிணியாயிருந்து பிறகு பிள்ளை பிறக்குமானால் அப்பிள்ளைக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை சொத்து பாகமான பின் ஸ்வீகாரமாகும் பிள்ளைக்கு முண்டென்ற பிரிவி கவுன்ஸில் தீர்ப்புப்படி ஸ்வீகாரப் பிள்ளைக்கு சொத்துரிமையுண்டென்று தீர்ப்பளித்தார்.

### காரைக்குடி S. M. S. வித்தியாசாலை பியாட்மிண்டன் கிளப்

10-11-41 திங்களன்று காலை 6-30 மணிக்கு, கிளப்பின் சார்பாக நடந்துவந்த இருவர் பந்தய விளையாட்டுப் போட்டியின் முடிவு விளையாட்டு நடந்தது. பரிசளிப்பு விழாவிற்கு டாக்டர் R. பீம்சிங் தலைமை வகித்தார். முடிவாக ஜெயித்த ஸ்ரீமான்கள் VR. வீரப்பன், T. ராமசாமி இருவருக்கும் இரண்டு கப்புகளும், முடிவாகத் தோல்வியுற்ற ஸ்ரீமான்கள் L. நாகப்பன், RM. சௌரி நாராயணன் இருவருக்கும் இரண்டு கப்புகளும் அளிக்கப் பெற்றன. மேலும் ஸ்ரீ RM. சேதுராமன் அவர்களுக்கு ஸ்ரீ N. வெங்கட்ராமய்யரவர்களாலும் ஸ்ரீ KR. ராமசாமி, ஸ்ரீ RM. அண்ணாமலை ஆகிய இருவருக்கும் ஸ்ரீ N. கிருஷ்ணன் அவர்களாலும் மூன்று ஸ்பெஷல் கப்புகள் அளிக்கப்பெற்றன.

### சரஸ்வதி வாசகசாலை ஆண்டு விழா

தேவகோட்டை சரஸ்வதி வாசகசாலையின் பதினாவது ஆண்டு நிறைவுவிழா நிகழும் ஐப்பசித் திங்கள் 30ம் நாள் சனிக்கிழமை காலை, மாலை இரு வேளைகளிலும் வாசகசாலைக் கட்டிடத்தில் நடைபெறும். வேதாரண்யம் சர்தார் அ. வேதரத்னம் அவர்கள் யம். யல். ஏ. தலைமைவகிப்பார்கள். மாணவி நா. தனலெட்சுமி "வீரத் தாய்மார்" என்பது பற்றியும், சென்னை பச்சையப்பன் கலாசாலை ஆசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள் M. A., "பண்டைய நிலையும் இன்றைய நிலையும்" என்பது பற்றியும், மாணவி பொ. தமயந்தி "வள்ளுவர் மறையும் மகாத்மா முறையும்" என்பதுபற்றியும், திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் "இராமனும் காந்தியும்" என்பதுபற்றியும், மயிலை திரு. இரத்தின சபாபதி முதலியார் அவர்கள் "பழந் தமிழர் கண்ட அரசியல்" என்பதுபற்றியும் சொற்பெருக் காற்றுவார்கள். மறுநாள் மாலை 4 மணி முதல் வாசகசாலைக் கட்டிடத்தில் இசை அரசு யம். யம். தண்டபாணி தேசிகர் அவர்கள் வாய்ப்பாட்டு, ஸ்ரீ பாலசுப்பராயலு அவர்கள் பிடில், ஸ்ரீ ஈஸ்வரய்யர் அவர்கள் மிருதங்கம், இவர்களடங்கிய சங்கீதக் கச்சேரி நடைபெறும்.

### இலங்கையில் அரிசி விநியோகக் கட்டுப்பாடு

அரிசி விநியோகத்தைக் கட்டுப்படுத்தி, அரிசியைப் பெறுவதற்காகச் சீட்டுகள் கொடுக்கப்படும் முறை பரீக்ஷார்த்தமாக கொழும்பு முனிசிபல் எல்லைக்குட்பட்ட இரு தொகுதிகளில் மேற்கொள்ளப்படலாம் என்று தெரியவருகிறது.



## யுத்தச் செய்திகள்

கிரிமியாவில் கடும் போர் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஸெபாஸ்டபோல் துறைமுகத்தின் வெளியரணை அடைந்து விட்டதாக ஜெர்மன் அறிக்கை கூறுகின்றது. ரஷ்யர் தீவிரமாக எதிர்த்துக் கொண்டே பின்வாங்குகின்றன ரெனத் தெரிகிறது. கெர்ச் பூசந்தியிலும் ரஷ்ய அரண் துளைக்கப்பட்டு தப்பி ஓடும் ரஷ்யர் படைகளை ஜெர்மன் படைகள் துரத்திச் சென்றுகொண்டிருக்கின்றன. ஏராளமான ஜெர்மன் விமானங்கள் கருங்கடலில் துருப்புகளை ஏற்றிச் செல்வதற்காக வைக்கப்பட்டிருக்கும் ரஷ்யக் கப்பல்களை மூழ்கடித்திருக்கின்றன. கிரிமியாவில் யால்டா என்ற பட்டணம் பிடிபட்டுவிட்டதாக ஜெர்மன் அறிக்கை கூறுகிறது. இது ராணுவப் பாதுகாப்புள்ள பட்டணமல்ல. தேகாரோக்கியத்திற்காக ரஷ்யர்கள் அங்கே வருவது வழக்கமாம்.

மத்தியப் பகுதியில் ஜெர்மானியர் மாஸ்கோவை நோக்கி புதிய தாக்குதல் ஒன்றை செய்துவருகிறார்கள் என்றும், ஏராளமான புதிய துருப்புகள் கொண்டுவரப்படுகின்றன வென்றும், ரஷ்ய அறிக்கை கூறுகிறது. அங்கு ஜெர்மானியர்களின் முன்னேற்றம் மிகவும் தடைபட்டு விட்டது. சோவியத் துருப்புகள் மும்முரமாக திரும்பித் தாக்குகின்றன. சரிலியன் பூசந்தியில் சில ஸ்தலங்களில் ஜெர்மானியர் ரஷ்யப் படைகளை ஊடுருவி முன்னேறினரென்றும், ஆனால் ஜெர்மன் முன்னணித் துருப்புகளை ரஷ்யத் துருப்புகள் சூழ்ந்து நிர்மூலமாக்க முயல்கின்றன வென்றும் கியுபிஷெவிலிருந்து வந்த ஒரு தந்தி கூறுகிறது. மாஸ்கோவுக்குத் தெற்கே 100 மைல் தூரத்திலுள்ள டூலா பகுதியில் கடும்போர் நிகழ்வதாகவும் குளிர் காலத்துக்குள் அப்பட்டணத்தைப் பிடிப்பதற்கு ஜெர்மானியர் தீவிரமாக முயல்கின்றனரென்றும் சொல்லப்படுகிறது.

வடக்கே லெனின்கிராட் முனையில் லெனின்கிராடுக்குத் தென்கிழக்கில் 100 மைலிலுள்ள முக்கிய ரயில்வே ஜங்ஷனான டிக்வின் என்ற பட்டணத்தை ஜெர்மானியர் பிடித்திருக்கின்னர். பட்டணத்தைப் பிடித்தபோது 6,000 ரஷ்யச் சுரங்க வெடிகள் அப்புறப் படுத்தப்பட்டனவாம். இந்த முனையில் அக்டோபர் 16-ந்தேதியிலிருந்து இதுவரை சுமார் 20 ஆயிரம் ரஷ்யர் கைது செய்யப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. லடோகா ஏரியின் கரையில் 15 மைல்தூரம் ஜெர்மானியர் முன்னேறி விட்டனராம். கடுங் குளிர்க்காலம் ஆரம்பமாவதற்குள் லெனின் கிராடைப் பிடித்துவிட வேண்டுமென்று ஜெர்மானியர் தீவிரமாக முயல்கின்றனர்.

மத்தியதரைக் கடலில் பிரிட்டிஷ் கப்பற் படை ஒரு முக்கியமான கடற் போர் புரிந்தது. இரண்டு எதிரிக் கப்பற் கூட்டங்களைத் தாக்கி 9 அச்சு நாட்டுக் கப்பல்களை மூழ்கடித்தது. ஒரு ஜர்மன் சப்ளைக் கப்பல் நெருப்புப்பற்றி கொழுந்து விட்டெரிந்ததாம். மேற்படிக் கப்பல் கூட்டங்களில் 2 சப்ளைக் கப்பல்கள், 2 நாசகாரிகள், சில குரூயிஸர்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. மேற்படி கடற்படை வெற்றியை மிஸ்டர் சர்ச்சில் வெகுவாய் பாராட்டியிருக்கிறார்.

### ராஜீயக் கைதிகள் விடுதலை

#### ஸ்ரீமான் சத்தியமூர்த்தி கருத்து

பம்பாயில் யுனைடெட் பிரஸ் நிருபர் ஸ்ரீமான் சத்தியமூர்த்தியைக் கண்டு ராஜீயச் சிறையாளர் விடுதலை சம்பந்தமாகக் கேட்டபோது அவர் தெரிவித்ததாவது:—

இரண்டு மூன்று வாரங்களில் சத்தியாக்கிரகக் கைதிகளனைவரும் ஒருங்கே விடுதலை செய்யப்படுவார்கள் என நினைக்க இடமிருக்கிறது. ஆனால் மௌலானா ஆஸாதையும் பண்டித ஜவாஹரையும் விடுதலை செய்யாமல் மற்றவர்களை விடுதலை செய்வதனால் அதில் ஒரு பெருந்தன்மையிருக்காதென்பதே என் கருத்து. இந்த விடுதலையின் பயனாக காங்கிரஸ் நிர்வாகிகள் ஒன்றுகூடிக் கலந்து ஆலோசிக்கக் கூடும். இந்த வருஷக் கடைசிக்குள் எப்படியும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடக்கலாமென்று தெரிகிறது.

## கவுன்சிலர் பதவி ராஜிநாமா

### ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொ.-வின் ராஜினுமாக் கடிதங்கள்

காரைக்குடி முனிசிபல் கவுன்சிலர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தமது கவுன்சிலர் பதவியை ராஜினாமாச் செய்து சேர்மனுக்கும் காங்கிரஸ் கட்சித் தலைவருக்கும் அனுப்பிய கடிதங்கள் வருமாறு:—

#### முனிசிபல் சேர்மேன், காரைக்குடி

அன்புடையீர்,

இதற்கு முன் நீங்கள் கூட்டிய இரண்டு முனிசிபல் கூட்டங்களுக்காக ஏற்பட்ட கக்ஷிக் கூட்டங்களில் தாங்கள் ஆஜராயிருந்தும் ஷை கவுன்சில் கூட்டங்களுக்குத் தாங்கள் வராமலிருந்ததோடு ஷை கவுன்சில் கூட்டங்களுக்கு வரவிருந்த சில அங்கத்தினர்களும் வராமலிருப்பதற்கு உதவியாயிருந்ததால் ஷை இரண்டு கவுன்சில் கூட்டங்களும் கவுன்சில் ஹாலில் கோரமில்லாத காரணத்தால் நடைபெறவில்லை. ஆகையால் பொறுப்பு வாய்ந்த காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பேரால் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சிலர்கள் பொது மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவர ஆற்ற முடியாமல் போகிறது. எனவே நான் இந்தக் கவுன்சிலின் அங்கத்தினர் பதவியை இதன் மூலம் ராஜினாமாச் செய்து கொள்கிறேன்.

காரைக்குடி, 6-11-41. } (Sd) ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார்.

(2)

#### முனிசிபல் காங்கிரஸ் கட்சித் தலைவர், காரைக்குடி

1. கட்டுப்பாடு ஒழுங்கு இவைகளின் அஸ்திவாரத்தில் எழும்பிய காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தமிழ்நாடு மாகாண கமிட்டித் தலைவரின் கட்டளை இந்நகர் காங்கிரஸ் முனிஸிபல் கக்ஷிக் கூட்டத்தில் ஒரு சில அங்கத்தினர்களின் தூண்டுதலால் மீறப்பட்டு விட்டது தாங்களறிந்த விஷயம். மேல்கண்ட கட்டுப்பாடு, ஒழுங்கு இவைகளை மீறிய செய்கைபற்றி இதுவரை ஒருவித பைசலும் காங்கிரஸ் மேலதிகாரிகளால் ஏற்பட வில்லை என்று தெரிகிறது.

2. முற்றிலும் காங்கிரஸ் மயமாகவுள்ள கவுன்சிலைச் சேர்ந்த முனிஸிபல் சிப்பந்திகள் கமிஷனர் முதல் பில்கலெக்டர் வரை முனிஸிபல் ஆஸ்பத்திரி டாக்டர்கள் உள்பட கட்டாய யுத்தநிதி வசூலில் மும்முரமாக ஈடுபட்டு வருவது தெரிந்தும், அச்செய்கை இன்னும் காரியாம்சத்தில் தடை செய்யப்பட வில்லை. இம்மாதிரி முனிஸிபல் சிப்பந்திகள் யுத்தநிதி வசூல் செய்வது தடைசெய்யப்பட முடியா விட்டால் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பேரால் வந்துள்ள கவுன்சிலர்கள் தங்கள் பதவியை ராஜினாமாச் செய்து ஷை கவுன்சிலினின்றும் விலகிக்கொள்ள வேணுமென்று அ.இ.கா.கமிட்டிக் காரியதரிசி ஏற்கெனவே அறிக்கை விடுத்திருந்தும் அவ்வறிக்கைபற்றி இதுகாறும் காங்கிரஸ் முனிசிபல் கக்ஷி ஒன்றும் கவனிக்கவில்லை. மேற்கூறிய இரண்டு விஷயங்களிலிருந்து இந்நகர் காங்கிரஸ் முனிஸிபல் கக்ஷி காங்கிரஸ் ஸ்தாபனத்தின் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவரின் கட்டளையை அவமதித்ததிலிருந்து எவ்வளவு தூரம் காப்பாற்றி யிருக்கிறதென்றும் அ. இ. கா. கமிட்டி காரியதரிசியின் அறிக்கையை எவ்வளவு தூரம் நடத்தையில் காண்பித்திருக்கிறதென்றும் நன்கு தெளிவாகும்.

3. சென்ற இரண்டு முனிஸிபல் கவுன்சில் கக்ஷிக் கூட்டங்களுக்கு வந்திருந்த அங்கத்தினர்கள் கவுன்சில் கூட்டத்தின் குறிப்பிட்ட நேரத்திற்கு மேல் ½ மணி நேரமாகியும் வேண்டுமென்றே கவுன்சில் கூட்டம் நடைபெறும் ஹாலுக்கு வராமல் கக்ஷிக் கூட்ட அறையிலேயே இருந்து விட்டதால் ஷை இரண்டு கூட்டங்களும் கோரமில்லாத நிலையில் நடைபெறாமல் போய்விட்டது.

நாளை 8-11-41உ நடைபெறவுள்ள கவுன்சில் கூட்டத்திற்கும் இன்று வரை அஜண்டா நகலும் வரவில்லை. இதைப் பார்த்தால் இந்தக் கூட்டமும் நடைபெறாது போல்தான் தெரிகிறது. எனவே பொறுப்புள்ள காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பேரால் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சிலர்கள் பொது மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமை தடைப்படுகிறது.

ஆகையால் மேற்கூறப்பட்ட காரணங்களைக்கொண்டு இந்தக் கவுன்சிலில் அங்கம் வகிப்பதால் பொது மக்களுக்கு என்னால் செய்ய வேண்டிய கடமை சரிவர செய்யப்பட முடியாது என்று ஏற்படுவதால் நான் என்னுடைய கவுன்சிலர் பதவியை ராஜினாமாச் செய்யத் தீர்மானித்து முனிஸிபல் சேர்மனுக்கு அனுப்பப்படுகிற ராஜினாமாக் கடிதத்தின் நகல் ஒன்று இத்துடன் தங்களுடைய கவனத்திற்கு அனுப்பியிருக்கிறேன்.

காரைக்குடி, 6-11-41. } (Sd) ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார்.

## யானைக்கு எந்த நாமம் இடுவது?

### காஞ்சீபுரத்தில் வடகலைத் தென்கலைத் தகராறு

காஞ்சீபுரம் தேவராஜஸ்வாமி கோவிலுக்குத் திருவாங்கூர் மகாராஜா சில மாதங்களுக்கு முன் ஒரு யானையை அளித்தார். திருவாங்கூர் சமஸ்தானத்திலிருந்து அது கால் நடையாகக் கொண்டுவரப்பட்டு காஞ்சிக்கு 10 மைல் தூரத்திலுள்ள மாங்கால் சத்திரம் கிராமத்தில் தற்போது கட்டிவைக்கப்பட்டிருக்கிறது. அதன் நெற்றிப்பட்டையில் வடகலை நாமம் இடுவதா, தென்கலை நாமம் இடுவதா என்பதுபற்றி அவ்வூரிலுள்ள வைஷ்ணவர்களுக்குள் தகராறு ஏற்பட்டிருக்கிறதாம். சென்னை ஹிந்துமத பரிபாலன போர்டுக்கு மனுச் செய்து கொண்டிருக்கிறார்களாம். இவ்விஷயம் முடிவு செய்யப்படும் வரையில் யானை காஞ்சீபுரத்துக்குக் கொண்டுவரப் படாமல் மேல் சொன்ன கிராமத்திலேயே இருக்கும் என்று சொல்லப்படுகிறது.

### ராஜாங்க சபைக் கூட்டம்

ராஜாங்க சபையின் கூட்டம் நவம்பர் 10-ந் தேதி காலை ஆரம்பமாயிற்று. ஸர் மாணிக்ஜி தாதாபாய் தலைமை தாங்கினார்.

#### இந்தோ - சீனவிலிருந்து பணம் அனுப்பத் தடை

ஆலன் லாயிட், இந்தோ-சீனப் பணம் அனுப்புத்தடை பற்றிக் கேட்கப்பட்ட கேள்விக்குப் பின் வருமாறு பதிலளித்தார்:

"இந்தோ—சீனவிலுள்ள பாங்கி, தற்காப்புச் சட்டப்படி ஒரு எதிரி ஸ்தாபனம்; எனவே இந்தியாவிலுள்ள அதன் ஐவேஜி எதிரி சொத்து மேற்பார்வை அதிகாரி வசம் இருந்து வருகிறது. சாதாரணமாக அந்த ஐவேஜியிலிருந்து பணம் கொடுக்கப்படுவதில்லை. இந்தியாவிலுள்ள அப்பாங்கியின் சொத்து தேக்கப்பட்டது முதல் இந்தோ—சீனவிலுள்ள அதிகாரிகள் அங்கிருக்கும் இந்தியர் இந்தியாவுக்குப் பணம் அனுப்பக் கூடாதெனத் தடுத்துவிட்டனர். ஆனால் அப்பாங்கியின் புதுச்சேரி கிளை இந்தியாவிலுள்ள கிளை ஆபீஸ்களின் சார்பாக பிரஞ்சு அல்லது பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவர்களுக்கு சில நிபந்தனைகளுக்குட்பட்டு, மாதாந்திரப் பணம் கொடுக்க அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இந்தோ—சீனவிலுள்ள இந்தியர் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள தங்கள் குடும்பங்களுக்காகப் பணம் அனுப்புவதுபற்றி சர்க்கார் மேற்கொண்டு ஆலோசித்து வருகின்றனர்."

#### பர்மா குடியேற்றம்

மறுநாள் நடந்த கூட்டத்தில் பர்மா குடியேற்றம்பற்றி கேட்கப்பட்ட கேள்விக்கு மிஸ்டர் போஸ்மான், திறமையற்ற தொழிலாளர் பர்மாவில் குடியேறுவதைத் தடை செய்வதால் அவர்களில் ஏராளமான பேர் பாதிக்கப்படுவர் என்பது சர்க்காருக்குத் தெரியும் என்றும், ஆனால் ஒரு வருஷத்தில் இங்ஙனம் குடியேற விரும்பியவர்களின் தொகையை மதிப்பிடுவது அசாத்தியம் என்றும் பதிலளித்தார்.

#### லீகினர் வெளியேற்றம்

செவ்வாய்க்கிழமைக் கூட்டத்தில் முஸ்லீம் லீக் கட்சியின் தலைவர் ஜனப் இமாம் ஒரு அறிக்கை வெளியிட்டவுடன் அவருடன் இரண்டு லீக் கட்சி அங்கத்தினர்கள் சபையிலிருந்து வெளியேறி விட்டனர்.

## மார்க்கட் செய்தி

### லண்டன் ரப்பர்

லண்டன், நவ. 10உ

ரப்பர் விலை குறிப்பிடப்பட வில்லை.

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, நவ. 10உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 57½ சதம் |
| ஷீட் ,, | 56 ,, |

#### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 34-25 |

### சிங்கப்பூர் ரப்பர்

நவ. 8உ

புகை போட்டது ஸ்டாண்டர்டு ஒரு பீக்கல் ஐம்பத் தொரு வெள்ளி இருபத்து மூன்று காசு.

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 11உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 29 | 9 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 29 | 9 | 6 |
| பூனை தோலா 1க்கு | 43 | 7 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 62 | 15 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

## காரைக்குடியில் ஸ்ரீ சா. கணேசனுக்கு வரவேற்பு

திரு. சா. கணேசன் அவர்கள் அலிப்புரம் சிறையிலிருந்து 6-11-41 காலை 6-10க்கு ஸ்டேஷனில் வந்திறங்கியதும், காங்கிரஸ் ஊழியர்களாலும் நகரப் பிரமுகர்களாலும் ஏராளமான அயலூர் நண்பர்களாலும் மாலை அணிவித்து உத்ஸாகமாக வரவேற்கப் பெற்றார். மோட்டாரில் அன்னாரின் மனைவியாருடன் ஊர்வலமாக காந்தி சதுக்கத்திற்கு அழைத்து வரப் பெற்று, டாக்டர் எஸ். சுப்பிரமண்யம் தலைமையில் கோகலே அருணாசலம் செட்டியாரால் ஸ்ரீ சா. கணேசனுக்கு உபசாரப்பத்திரம் வாசித்தளிக்கப்பெற்றது. ஸ்ரீ சா. கணேசன் "சிறை வாழ்க்கையின் அனுபவம்"பற்றிப் பேசினார். சத்தியாக்கிரஹக் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ பழ. வெங்கிடாசலம் அவர்கள் நன்றி கூறினார். நகரின் முக்கிய வீதிகளின் வழியாக ஊர்வலமாக ஸ்ரீ சா. கணேசன் அவரது 'கற்பக நிலைய' பங்களாவிற்கு அழைத்துச் செல்லப்பட்டார். மாலையில் நியூடவுன் 3-வது வார்டு முனிஸிபல் பள்ளிக்கூடத்தில் ஒரு தேனீர் விருந்து காங்கிரஸ் ஊழியர்களால் ஸ்ரீ சா. கணேசனுக்கு அளிக்கப்பெற்று கண்டனூர் அன்பு நாச்சியப்பா தலைமையில் பாராட்டுக் கூட்டமும் நடைபெற்றது.

### அமெரிக்காவுக்கு இலங்கைக் காரீயம்

இலங்கைக் காரியத்தை ஐக்கிய அமெரிக்காவுக்கு விநியோகம் செய்வதற்குரிய முன்னேற்பாடுகளை இலங்கைத் தொழில் வர்த்தக மந்திரி சபை எடுத்துக்கொண்டு வருவதாகத் தெரியவருகிறது.

### குழந்தைகளுக்கெனப் புஸ்தகசாலை

கொழும்பில் உள்ள முனிஸிபல் பொதுப் புஸ்தகசாலையில் குழந்தைகளுக்கு என்று ஓர் தனிப்பகுதியைத் திறந்து வைக்க வேண்டும் என்றும் பிரஸ்தாபப் பகுதியில். 14 வயதிற்கு உட்பட்டவர்கள் எல்லாம் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படலாம் என்றும் ஆலோசனை கூறப்பட்டிருக்கிறது.

### மூவாநல்லூர் கிராமத்தில் தர்மப் பாடசாலை

தஞ்சாவூர் ஜில்லா இராஜமன்னார்குடி தாலூகா மூவாநல்லூர் கிராமத்தில் கலுவம்பல்லவராயர் தரும தமிழ் பாடசாலை ஒன்று கிள்ளான் கண்டிராக்டரும்மேற்படிகலுவம்பல்லவராயரின் குமாரருமான அ. க. தியாகராசப் பல்லவராயரால் தனது தகப்பனாரின் ஞாபகார்த்தமாக அரிய முயற்சியாலும் திரவிய உதவியாலும், ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதில் இப்போது 60 பிள்ளைகள் படிக்க முன்வந்துள்ளார்கள்.

## சுடுகாட்டிலும் தீண்டாமை!

### கவுன்ஸிலர் உள்பட 5 பேர் கைது

ஒரு ஹரிஜனின் பிணத்தைப் புதைப்பது சம்பந்தமாக ஏற்பட்ட தகராறையொட்டி பம்பாயைச் சேர்ந்த வில்லிபரேல் போலீஸார் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர், முனிஸிபல் கவுன்ஸிலர் ஒருவர், உள்ளூர் ஹரிஜன சேவா சங்கக் காரியதரிசி, இரண்டு ஹரிஜன்கள் ஆகிய 5 பேரைக் கைது செய்திருக்கின்றனர். சுடுகாடு உள்ள நிலம் சர்க்காரால் இனமாகக் கொடுக்கப்பட்டதாதலால் அதில் எல்லா ஹிந்துக்களின் சவங்களுக்கும் இடம் கிடைக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்யப்பட்டது. மேற்படி ஹரிஜன் இறந்ததும் அவனது சவத்தை அடக்கம் செய்வதற்காக ஹரிஜனங்கள் சுடுகாட்டின் கதவுகளை உடைத்துச் சென்று தங்கள் காரியத்தை நிறைவேற்றினராம். சுடுகாட்டு நிர்வாகிகள் இது சம்பந்தமாகப் போலீஸாருக்குப் புகார் செய்து கொண்டதின் பேரில் போலீஸார் ஆறுபேர்களைக் கைது செய்திருப்பதாகத் தெரிகிறது.

### அண்ணாமலை சர்வகலாசாலை செனட் சபைக்கு நியமனம்

அண்ணாமலை சர்வகலாசாலையின் ஸ்தாபக புரோசான்ஸலரான ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் செனட், ஸிண்டிகேட் சபைகளுக்கு அடியிற்கண்டவர்களை நியமித்திருக்கிறார்:

செனட் சபை: ஸ்ரீ டி. எஸ். நடராஜ பிள்ளை, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், ஸ்ரீ பஷீர் அகமத் ஸையத், திவான்பகதூர் கே. எஸ். ராமசாமி சாஸ்திரியார்.

ஸிண்டிகேட் சபை: புதுக்கோட்டை ஸ்ரீ கே. நாகராஜ ஐயர், ஸ்ரீ வி. பி. நாராயண நம்பியார்.

### சென்னையில் சீர்திருத்தக் கமிஷனர்

இந்திய சர்க்கார் சீர்திருத்தக் கமிஷனர் மிஸ்டர் யச். வி. ஹாட்ஸன் சென்னை வந்திருக்கிறார். அவர் ஸர் மகமத் உஸ்மானைச் சந்தித்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார். பின்னர் சென்னை சட்டசபையில் எதிர்க் கட்சித் தலைவர் குமாரராஜா ஸர் முத்தையா செட்டியாரை அடையாற்றில் அவர் வாசஸ்தலத்திற்குச் சென்று சந்தித்து பொது நிலைமையைக் குறித்து ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்ததாகத் தெரிகிறது.

### சயாம் மக்களுக்கு எச்சரிக்கை

ஸயாம் இந்த வருஷத்திலோ அடுத்த வருஷத்திலோ யுத்தத்தில் கலந்திருக்குமென்றும், ஆகையால் எல்லோரும் அதற்குத் தயாராயிருக்க வேண்டுமென்றும் பாங்காக் சர்க்கார் ரேடியோவில் பொது மக்களுக்கு எச்சரிக்கை விடப்பட்டிருக்கிறது.

### பத்திரிகைகளின் விலை நிர்ணயம்

சமாசாரப் பத்திரிகைகளின் பக்கங்களுக்கு ஏற்றபடி விலையை நிர்ணயிப்பதென்றும், சர்க்கார் குறிப்பிடும் பக்கத்துக்குக் குறைந்தாலும் கூடினாலும் அதற்கேற்ப விலையை நிர்ணயிப்பதென்றும் ஒரு திட்டம் ஏற்பாடாகி யிருப்பதாகத் தெரிகிறது.

### பிச்சைக்காரர்கள் தொல்லையை ஒழிக்க

#### தென்னிந்திய ரயில்வேயின் ஆலோசனை

தென்னிந்திய ரெயில்வே ஆலோசனை சபையின் கூட்டம் சென்னையில் சமீபத்தில் மிஸ்டர் ரேயினால்ட்ஸ் தலைமையில் நடைபெற்றது. ரெயில்வே ஸ்டேஷன்களில் பிச்சைக்காரர்கள் தொல்லையை நிறுத்துவதற்காக ஸ்டேஷனில் பண்டங்களை விற்பவர் இரவில் 11 மணிக்குப் பிறகும், விடியற் காலையில் 6 மணிக்கு முன்னரும் விற்பனை செய்யக் கூடாதென்று தடுக்கப் போவதாகவும், பிரயாணிகள் பிச்சைக்காரர்களிடம் அனுதாபம் காட்டும் வரையில் இந்த ஏற்பாட்டால் நன்மை விளையாதென்றும் தெரிவித்தார்.

## ஜப்பானுக்கு சர்ச்சில் எச்சரிக்கை

### "நாஸிகளுடன் ஒரு போதும், சமரசமில்லை"

பஸிபிக்கில் சமாதானத்தை நிலை நிறுத்த யுனைடெட் ஸ்டேட்ஸ் செய்யும் முயற்சி பலிக்காமல் போய், அது காரணமாக அமெரிக்கா ஜப்பானுடன் யுத்தம் தொடுக்க நேர்ந்தால், அதே சமயத்தில் பிரிட்டனும் யுத்தப் பிரகடனம் வெளியிடும் என்று லண்டன் மேயர் விருந்தில் மிஸ்டர் சர்ச்சில் தெரிவித்தார். ஹிட்லருடனோ, வேறு எந்த நாஜிக் கட்சியுடனோ பிரிட்டிஷ் சர்க்கார் ஒருபோதும் சமரசம் பேசப் போவதில்லை யென்றும் அவர் தெரிவித்தார்.

### சென்னை பொது உடைமைச் சதி வழக்கு

டாக்டர் பி. சுப்பராயன் அவர்களது புத்திரர் ஸ்ரீ மோஹன் குமாரமங்கலம் முதலிய ஏழு பேர் மீது தொடரப்பட்ட பொது உடைமைச் சதி வழக்கின் தீர்ப்பு 8—11—41-ல் சொல்லப்பட விருந்தது. 4-வது எதிரி ஸ்ரீ கோஷியன் தேக அசௌக்கிய முற்றிருப்பதால் வழக்கின் தீர்ப்பு 19-ந்தேதி சொல்லப்படுமென்று நீதிபதி உத்தரவிட்டிருக்கிறார்.

## ஏழாம் எட்வர்ட் தலையுள்ள நாணயங்கள்

### 1942 மே மாதத்திற்குப் பிறகு செல்லா

மத்திய சர்க்கார் அறிக்கை ஒன்று கூறுவதாவது:—

ஏழாம் எட்வர்ட் தலை போட்ட ரூபாய்களும், எட்டணா நாணயங்களும், 1942ளு மேமீ 31-ந்தேதிக்குப் பிறகு செல்லுபடியாகாவென்று 7-11-41ல் பிரசுரமான இந்திய சர்க்கார் கெஜட்டில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பழைய நாணயங்களுக்குப் பதிலாகப் புதிய ஆறாம் ஜார்ஜ் தலை போட்ட நாணயங்களை அதிகமாகச் செலாவணியில் வைக்க வேண்டுமென்பதே இந்திய சர்க்காரின் கொள்கை. அப்படிச் செய்தால்தான் நாணயங்களைத் தயாரிப்பதில் குறைந்த அளவில் வெள்ளியை உபயோகிக்க முடியும். பழைய நாணயங்களில் வெள்ளிக் கலப்பு அதிகம், புதியவற்றில் குறைவு. தவிர, கள்ள நாணயங்கள் தயாரிக்கப்படுவதைத் தடுப்பதற்கு அதுதான் வழி. புதிய நாணயங்களின் விளிம்பு அமைக்கப்பட்டிருக்கும் முறை கள்ளத்தனமாகத் தயாரிப்பதற்குச் சுலபமாக இடங்கொடாது. பழைய நாணயங்களுக்குப் பதிலாகப் புதிய நாணயங்களை வெளியிடப் போதிய புதிய நாணயங்கள் கையிருப்பில் இருக்கின்றன. ஏழாம் எட்வர்ட் தலைபோட்ட நாணயங்கள் 1942ளு செப்டம்பர்மீ 30-ந்தேதி வரையில் எல்லா சர்க்கார் கஜானாக்களிலும், தபாலாபீஸ்களிலும் ரெயில்வே ஸ்டேஷன்களிலும் பெற்றுக்கொள்ளப்படும். அதற்கப்பால் அவை பம்பாய், கல்கத்தா, சென்னை இவ்விடங்களிலுள்ள ரிசர்வ் பாங்கியின் வெளியீடு இலாகாக்களில் மட்டுமே எடுத்துக்கொள்ளப்படும்.

## 'அஹிம்சை பலிக்க இடமில்லை'

### ஸ்ரீ சத்யமூர்த்தி பிரசங்கம்

பம்பாய் சமீபம் ஓரிடத்தில் ஸ்ரீ சத்யமூர்த்தி செய்த பிரசங்கம் ஒன்றில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"இந்தக் காலத்தில் இப் பைத்தியக்கார உலகிலும் அஹிம்சையைப் பின்பற்றினால் இந்தியாவுக்குப் பிற்காலத்தில் விமோசனமுண்டு என்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படியிருந்தால் நன்மைதான். ஆனால், உலகின் தற்காலிகப் போக்கைக் கவனிக்கையில், இந்தியா சுதந்திரம் பெற்றாலும், தக்க வழிகளில்லாவிட்டால், இந்நாட்டைப் பாதுகாக்க முடியாதென்பதே என் கருத்து. மனித வர்க்கம் உய்வதற்கு இறுதியில் அஹிம்சையே ஏற்றதென்பதை ஒப்புக்கொள்கிறேன். இவ்விதம் யுத்தம் நீடித்து நடந்தால், மனித வர்க்கம் பிழைப்பதற்கேயில்லை.

'போலீஸ் உதவியின்றி உள்நாட்டுக் குழப்பங்களைத் தவிர்க்க நம்மால் முடியுமென நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். வகுப்புக் கலகங்கள் நடப்பதற்குக் காலாடிகள்தான் காரணம். காங்கிரஸ் மீண்டும் பதவிக்கு வந்தால், இவ்விதக் கலகங்களைக் கடுமையான முறையால் அடக்கிவிடும். இவ்விதம் கலகம் செய்வதால் நன்மை கிடைக்குமென சிறுபான்மையோர் கருதினால் ஏமாற்றமடைய வேண்டியதுதான்."

### ஒரு ரூபாய் கள்ள நோட்டு அச்சிட்டதாக

#### அலகபாத்தில் 11 பேர் கைது

அலகபாத் ஸி. ஐ. டி. போலீஸாரும், ஸ்தல போலீஸாரும் நகரில் 20 இடங்களைச் சோதனையிட்டு 11பேர்களைக் கைது செய்தனர். கள்ளத்தனமாக நாணயங்கள் தயாரித்துவரும் ஒரு கூட்டத்தினரைப் பிடிப்பதற்காகவே இச்சோதனை நடந்தது. பாதி அளவுக்குத் தயாரிக்கப்பட்ட ஆயிரம் 1 ரூபாய் நோட்டுகளும் அவற்றைத் தயாரிப்பதற்கான சாதனங்களும் கைப்பற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது.

### சிவகெங்கைச் செய்திகள்

(நமது நிருபர்)

இவ்வூர் முதலியார் தெருவிலுள்ள லெக்ஷுமணனந்த பஜனை மடத்தில் நாளது நவம்பர்மீ 2உ ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு திரு. பூவை. நடேச முதலியாரவர்கள் தலைமையில் வித்வான் திரு. சோமசுந்தரம் அய்யாவர்களது "திருக்குறள்" பிரசங்கம் மிகச் சிறப்பாக நடந்தேறியது. திருவாளர் பூவை நடேச முதலியாரைத் தலைவராகவும், திரு. ந. காளியப்ப பிள்ளையைக் காரியதரிசியாகவும், திரு. எஸ். சின்னத்தம்பி பிள்ளையை உபகாரியதரிசியாகவும் நியமித்துக் கூட்டம் 6 மணிக்கு முடிவடைந்தது. ஞாயிற்றுக்கிழமை தோறும் இப் பிரசங்கம் நடந்து வரும்.

#### உத்தியோக மாற்றம்

சிவகெங்கை எஸ்டேட் உதவி திவானாக விருக்கும் ராவ்பகதூர் ஜே. பாலாஜி ராவ் பி. ஏ., அவர்களை இராமனாதபுரம் எஸ்டேட் மானேஜராக டிசம்பரில் பதவி வகிக்கும்படி சென்னை கோர்டாப் வார்ட்ஸால் உத்தரவாகி யிருக்கிறது.

### வாஷிங்டனில் ஸோவியத் தூதர்

வாஷிங்டனில் ஸோவியத் தூதராக மிஸ்டர் லிட்வினாப் நியமிக்கப்பட்டிருக்கிறார்.





## தமாஷ் வரிச் சட்டம்

### வரிவசூல் பற்றிய புள்ளி விவரங்கள்

1939-ம் வருடத் தமாஷ் வரிச் சட்டத்தின் அமுல்பற்றிய ரிவென்யு போர்டின் நிர்வாக அறிக்கை வெளியாகியிருக்கிறது. இச்சட்டம் 1939ல் அமுலுக்கு வந்ததாயினும் அவ்வருஷம் 8 மாதகாலம் மட்டுமே அமுலிலிருந்தது. முனிசிபாலிடி இல்லாத பிரதேசங்களில் வர்த்தக வரி வசூல் இலாகாவும், முனிசிபல் பிரதேசங்களில் முனிசிபாலிடிகளும், சென்னையில் கார்ப்பரேஷனும் இந்த வரியை வசூலித்தன. பிரஸ்தாப வருடம் நிட்டப்படுத்திய மொத்த வரித் தொகை ரூ 13,14,249; சென்ற வருடம் 8 மாதங்கட்கு ரூ 8,39,778. இவ்வருஷம் வசூலானது மொத்தம் 13,03,649 ரூபாய் (9,01,610 ரொக்கம்; 4,02,039 ஸ்டாம்பு மூலம்) வருஷக் கடைசி பாக்கியாக நின்றது ரூ 10,600; இதில் பின் வசூலானது ரூபாய் 7,715. விசாகபட்டணம், கீழக் கோதாவரி, மேலக் கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர், நெல்லூர், கர்நூல், பெல்லாரி, கடப்பை, வட ஆற்காடு, தஞ்சை, திருச்சி, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் வரி பாக்கிக்காக மொத்தம் 61 இனங்களில் நடவடிக்கை யெடுக்கப்பட்டது.

தமாஷ் வரிச் சட்டத்தின் மூலம் ஸ்தல ஸ்தாபனங்களின் வருமானம் பாதிக்கப்பட்டதை ஈடு கட்டுவதற்காக சர்க்காரே ஒவ்வொரு ஸ்தலஸ்தாபனத்துக்கும் கொடுபடவேண்டிய தொகையை நிர்ணயஞ் செய்தனர். ஒவ்வொரு வருஷமும் இந்த இனத்தில் சர்க்கார் விநியோகிக்க வேண்டிய தொகை ரூ 1,70,537. முந்தின வருடம் 8 மாதத்துக்கும் பிரஸ்தாப வருடத்துக்குமாகச் சேர்த்து மொத்தமாகக் கொடுபட்ட தொகை ரூ 2,82,016. முந்தின வருஷம் வரி வசூல் செய்து கொடுத்ததற்காக ஸ்தல ஸ்தாபனங்கட்குக் கமிஷனாகக் கொடுத்த தொகை ரூ 36,087. வசூல் செலவு, ஸ்தாபனங்கட்கு நஷ்ட ஈடு ஆகியவற்றிற்கு மொத்த வசூலில் 10 சதமானத்தைக் குறைத்துக் கொண்டால், இவ்வருஷம் இந்தச் சட்ட அமுல் மூலம் மொத்தம் சென்னை சர்க்காருக்கு ரூ 10,09,691 கிடைத்திருப்பது தெரிய வரும்.

1940-41ல் மொத்தம் நடந்த தமாஷாக்கள் 2,43,181. இவற்றில் 1748 க்கு விலக்களிக்கப்பட்டது. இராமநாதபுரம் ஜில்லாவில் மட்டும் நடந்த தமாஷாக்கள் 11,553; விலக்களிக்கப்பட்டவை 118. பிரஸ்தாப வருடம் ராமநாதபுரம் ஜில்லாவில் மட்டும் வசூலான ரூ 61,666. மொத்தத்தில் சட்ட அமுலும், வரிவசூலும் திருப்திகரமாயிருப்பதாகச் சர்க்கார் தங்கள் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

### மீன்லா

20—10—41 திங்கட்கிழமை மாலை 6 மணிக்கு நேரு வாசகசாலைச் சார்பில் திரு. சி. அ. சி. ராம. இராமன் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டு சித. அ. சித. வெங்கிடாஜலம் செட்டியார் அவர்கள் தலைமையில் பிரிவுபசாரக் கூட்டம் நடைபெற்றது. விருந்தினருக்கு மு. சி. ரெங்கனாதன் செட்டியாரவர்களால் பிரிவுபசாரப் பத்திரம் வாசித்து அளிக்கப் பெற்றும் விருந்தினரைப்பற்றிச் சில அறிஞர்கள் சொற்பொழிவாற்றினதுடன் வந்திருந்தோர் அனைவருக்கும் தேநீர் விருந்து நடத்தப்பெற்றும் கூட்டம் முடிவடைந்தது.

### விமானத் தாக்குதல் பாதுகாப்பு வேலைக்குக் கால் பம்பு

கல்கத்தா தொழிற்சாலை ஒன்று சப்ளை இலாகாவுக்கு தெர்மக்ஸ் கால் பம்பு ஒன்றுக்கு மாதிரி அனுப்பிற்று. அதைப் பரிசீலனை செய்ததில் அது திருப்திகரமாயிருக்கும் என்று தெரிந்தது. ஒன்றிரண்டு சிறு மாறுதல்கள் மாத்திரம் செய்தால் போதும். இந்தியாவின் விமானத் தாக்குதல் பாதுகாப்பு வேலைக்காக இந்தியாவிலேயே செய்யப்படும் பம்புகளின் எண்ணிக்கையை இது அதிகமாக்கும். மரத்தால் செய்யப்பட்ட இப்பம்புக்கு நடுவில் ரப்பர் அமைக்கப்பட்டிருக்கிறது. தேவையான நீளமுள்ள ரப்பர் குழாயும் பம்புடன் இணைக்கப்பட்டிருக்கிறது.



அபிஸீனியா மீண்டும் அபிஸீனியர் வசம் வந்ததும், அங்குள்ள இத்தாலியத் துருப்புகள் கைதிகளாக்கப்பட்டனர். அவர்களுக்குப் பிரிட்டிஷ் ராணுவ வீரர்கள் உணவளிக்கும் காட்சி.



## இராமநாதபுரம் ஜில்லா போர்டு ஏல நோட்டீஸ்

திருப்பத்தூர் தாலூகா அமராவதிபுதூர் கிராமத்தில் தேவகோட்டை ரோடு ரெயில்வே ஸ்டேஷனுக்கு சமீபத்தில் இராமநாதபுரம் ஜில்லாபோர்டுக்குச் சொந்தமான 4 ஏக்கர் 73 செண்டு விஸ்திரணமுள்ள சரளை குவாரி இடம் இப்பொழுது ஜில்லா போர்டுக்கு தேவையில்லாததால் ஷை இடத்தை 1941-ளு நவம்பர் மீ 29-உ பகல் 3 மணிக்கு ஷை இடத்திலேயே இராமநாதபுரம் ஜில்லா போர்டு பிரஸிடெண்டவர்களால் பகிரங்கமாய் ஏலத்தில் விலைக்கு விற்கப்படும்.

சொத்தின் சர்க்கார் மதிப்பு ரூ 1200 ஆகும். தேவையுள்ளவர்கள் ரூ 100 டேவணியாகக் கட்டி ஏலம் கேட்கலாம். ஏலமானது 17-10-39உ யுள்ள 4039 எல்.ஏ. கவர்ன்மெண்டு உத்திரவில் கண்ட நிபந்தனைகளுக்குள்பட்டது. அதாவது ஷை இடத்திற்கு கவர்ன்மெண்டாரால் அப்போதைக்கப்போது நிர்ணயிக்கப்படும் நில வரியை ஏலமெடுத்தவர் செலுத்தவேண்டியது. ஏலம் இராமநாதபுரம் ஜில்லா போர்டாரின் அங்கீகாரத்திற் குள்ப்பட்டது. ஏலம் எடுத்தவர் ஏலத் துகையில் 3ல் ஒரு பங்கை உடனே கட்டவேண்டியது. பிறகு டிஸ்டிரிக்ட் போர்டாரின் அங்கீகாரத்தின் பேரில் மீதத் தொகை பூராவையும் உத்திரவு கிடைத்த ஒரு வாரத்திற்குள் திருப்பத்தூர் கஜானாவிலாவது காரைக்குடி லோகல் பண்டு ஓவர்ஸியரிடமாவது கட்டிவிடுவதுடன் ஏலம் எடுத்தவர் தங்களுடைய சொந்த சிலவில் கிரயப் பத்திரம் எழுதிவாங்கிக் கொள்ளவேண்டியது.

அப்படி ஏலம் கேட்ட பிறகு குறிப்பிட்ட காலத்திற்குள் பூருத் துகையையும் செலுத்தத் தவறினால் மறு ஏலத்தில் விடுவதுடன் முன் டேவணியாக்க் கட்டிய ரூ 100ம் இழப்பதுடன், மறு ஏலம் போடுவதினால் ஏதாவது நஷ்டம் ஏற்பட்டால் அந்த நஷ்டியையும் வசூலிக்கப்படுமென்பதை இதன்மூலம் தெரிவிக்கப்படுகிறது.

மதுரை, 31-10-41

பி. எஸ். குமாரசாமி ராஜா,
பிரஸிடெண்டு, இராமநாதபுரம் ஜில்லா போர்டு.

## காஷ்மீரில் சுதேசிக் காகிதத் தொழில்

### சர்க்கார் இலாகா ஆதரவு

சுதேசிக் காகிதக் (கையால் செய்தது) தொழில் காஷ்மீரில் நீண்ட காலமாக நிலைபெற்று வந்த தொழிலாகும். இது பற்றி ஸ்ரீ பி. பி. சர்மா "மாடர்ன் ரிவ்யூ"வில் வரைந்துள்ள ஒரு கட்டுரையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.—

சென்ற சில வருஷங்களாக இந்தியாவில் கையால் காகிதம் செய்யும் தொழிலைப் புனருத்தாரணம் செய்ய அரு முயற்சி செய்யப்படுகிறது. இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் நிர்மாணத் திட்டத்தில் இதுவும் ஒரு விஷயமாகும். காஷ்மீரில் இத்தொழில் மறைந்து ... நிலையிலிருந்தது இது காரணமாக உயிர் பெற்றுவிட்டது. காஷ்மீர் மன்னர் ஜெயின்—உல்—ஆப்தீன் (1420-1470) பெர்ஷியாவிலிருந்து இத்தொழிலைத் தன் நாட்டிற்குக் கொண்டு வந்தார். மொகலாயர் காலத்தில் அங்கு இத்தொழில் மிகச் செழுமையாக நடைபெற்று வந்தது. மொகலாயர் அரசாங்கக் காரியாலயத்தில், தஸ்தவேஜிகள் எழுதக் காஷ்மீர் காகிதமே உபயோகிக்கப்பட்டது. மகாராஜா ரணவீர சிங் காலம் வரை அங்கு யந்திரக் காகிதம் இறக்குமதி செய்யப்படவில்லை. 1888-ல் காஷ்மீர் சர்க்கார் காரியாலயங்கள் எல்லாம் புது முறையில் திருத்தி அமைக்கப்பட்டன; அது காரணமாகக் காகித உபயோகம் அதிகரித்தது. கல்வி அதிகரித்ததாலும் காகிதத்தின் தேவை அதிகரிக்கவே, மலிவாயுள்ள யந்திரக் காகிதம் வந்து, சுதேசிக் காகிதத்தின் இடத்தைப் பிடித்துக்கொண்டது. எனினும் சுதேசிக் காகிதத் தொழில் சாகாமல் இன்று வரை இருந்துதான் வருகிறது. சில குடும்பங்கள் இத்தொழிலைக் கொண்டே தங்கள் ஜீவனத்தைக் கழித்து வந்தன.

பம்பாய், மதராஸ், ஹைதராபாத், மணிபுரி முதலிய இடங்களில் சுதேசிக் காகிதம் செய்வதற்கும், காஷ்மீரில் செய்வதற்கும் வித்தியாசம் உண்டு. காஷ்மீர் காகிதம் மிக வலுவுடையது என்றும் நீண்ட காலம் நிலைத்திருக்கத்தக்கதென்றும் பேர் பெற்றது. மற்ற இடங்களில் சணல், கழிவு காகிதம் இவற்றை உபயோகிக்கிறார்கள். மணிபுரியில் ஷு அரசா என்ற செடியின் நாரை உபயோகிக்கின்றார்கள். ஆனால் காஷ்மீரில் பல நூற்றாண்டுகளாகவே கழிவு பருத்தி, கந்தல் துணி முதலியவற்றை உபயோகித்துக் காகிதம் செய்து வருகிறார்கள். இவற்றுடன் கொஞ்சம் சணலையும் சேர்ப்பார்கள். அங்குள்ள சில சர்க்கார் இலாகாக்கள் இத்தொழிலுக்கு ஆதரவளிக்கின்றன. உதாரணமாகப் பஞ்சாயத்து இலாகா தனக்கு வேண்டிய நமூனாக்களை அச்சிட சுதேசிக் காகிதத்தை உபயோகித்துத் திருப்தி தெரிவித்திருக்கிறது.

### இலங்கையில் பெட்ரோல் கட்டுப்பாடு

நவம்பர் முதல் தேதியிலிருந்து இலங்கையில் பெட்ரோல் கட்டுப்பாடுத் திட்டம் அமுலுக்கு வந்துவிட்டது. அவரவர் தேவைக்குத் தக்கபடி பெட்ரோல் கூபன்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

### பர்மாவில் சர்க்கரைக் கட்டுப்பாடு

சர்க்கரை விநியோகத்தில் கட்டுப்பாட்டு முறையை அமுலுக்குக் கொண்டு வருவதாக பர்மா சர்க்கார் தெரிவித்திருக்கின்றனர். மே, ஜூன், ஜூலை மாதங்களில் மொத்த வியாபாரிகளுக்கும் சில்லறை வியாபாரிகளுக்கும் எவ்வளவு சர்க்கரை தேவைப்பட்டதோ அவ்வளவு அவர்கட்குக் கொடுக்கப்படும். பெருமழை காரணமாக சர்க்கரை தயாரிப்பு பாதிக்கப்பட்டிருப்பதே இந்த நடவடிக்கையின் காரணமாகும்.

## சுதேச சமஸ்தானங்கள்

இந்தியாவில் சுதேச சமஸ்தானங்கள், ஜாகிர்கள், எஸ்டேட்டுகளாக மொத்தம் 601 இருக்கின்றன. இவற்றில் 286 தாலுக்கள் என்ற பெயரால் ஒழுங்கு படுத்தப்பட்டு, இந்திய சர்க்கார் நியமித்த அதிகாரிகளுடைய நிர்வாகத்திலிருந்து வருகின்றன. 140 லட்சத்துக்கு மேற்பட்ட ஜனத்தொகையும் 8½ கோடி ரூபாய் வருஷ வருமானமுமுள்ள ஹைதராபாத் முதல், 27பேரே பிரஜைகளும், வருட வருமானம் 80 ரூபாயுமுள்ள பில்பாரி வரையுள்ள சமஸ்தானங்கள் இங்கே இருக்கின்றன. இந்த சமஸ்தானங்களைப்பற்றியும், இவற்றைத் திருத்தித் தொகுக்க வேண்டியதன் அவசியத்தைப்பற்றியும் புள்ளி விவரங்களுடன் புரபஸர் கே. ஆர். ஆர். சாஸ்திரி எம். ஏ., எம். எல்., 'மாடர்ன் ரிவ்யூ'வில் ஒரு ருசிகரமான கட்டுரை வரைந்திருக்கிறார்.

10 முதல் 100 சதுர மைல் வரை விஸ்தீரணமுள்ள சமஸ்தானங்கள் 178 இருக்கின்றன. 202 சமஸ்தானங்கள் ஒவ்வொன்றும் 10 சதுர மைலுக்கும் குறைவாகவே விஸ்தீரணமுள்ளவைதான். 10 சமஸ்தானங்கள் மட்டும் ஹைக்கோர்ட்டுகள் வைத்திருக்கின்றன. 34 சமஸ்தானங்கள் நீதிபரிபாலனத்தை நிர்வாகத்திலிருந்து பிரித்துவிட்டன. 56 சமஸ்தான அதிபதிகள் தங்களுக்கென்று தனியாக, திட்டமான தொகையை வருமானத்திலிருந்து எடுத்துக்கொள்கிருர்கள். 46 சமஸ்தானங்களில் படிப்படியாக அதிகாரம் வகுக்கப்பட்ட ஸிவில் உத்யோக ஜாப்தா இருக்கிறது. 54 சமஸ்தானங்களில்தான் பென்ஷன், அல்லது பிராவிடண்டு நிதித் திட்டம் இருக்கிறது.

சிறு சமஸ்தானங்கள், ஜாகிர்கள் சம்பந்தமாகப் பல்வேறு அபிப்பிராயங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன.

சில்லரை சமஸ்தானங்களைப் பக்கத்து மாகாணங்களுடன் இணைத்துவிட வேண்டுமென்றும், பெரிய சமஸ்தானங்களை சமஷ்டியில் சேர்த்து அவற்றின் அதிபதிகள் சட்டவரம்புக்குட்பட்ட மன்னர்களாக ஆய்விட வேண்டுமென்றும் காலஞ்சென்ற ஸ்ரீ எஸ். சீனிவாச ஐயங்கார் ஒரு யோசனை கூறினர்.

1939 பிப்ரவரியில் லூதியானவில் கூடிய அகில இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாடு, குறைந்த பட்சம் 50 லட்சம் ரூபாய் வருஷ வருமானமில்லாத சமஸ்தானங்களும்; 20 லட்சத்துக்குக் குறைந்த ஜனத்தொகையுள்ள சமஸ்தானங்களும் பக்கத்து மாகாணங்களுடன் சேர்ந்துவிட வேண்டுமென்று ஒரு தீர்மானத்தின் மூலம் சிபார்சு செய்தது. இந்தத் தீர்மானம் அமுலுக்கு வந்தால், 21 சமஸ்தானங்களே தனி இனங்களாக எஞ்சி நிற்கும். மீதமுள்ள 580ம் மற்ற பிரதேசங்களுடன் இணைந்துபோகும்.

கணக்கற்ற சிறிய சமஸ்தானங்கள்—ஒரு பள்ளிக்கூடத்தை அல்லது ஒரு மாஜிஸ்திரேட்டை வைத்து நிர்வகிக்க முடியாத சிறிய சமஸ்தானங்களை பிரிட்டிஷ் இந்தியாவுடனே அல்லது பக்கத்து சமஸ்தானங்களுடனே இணைத்துவிட வேண்டுமென்று 1940ல் கூடிய காங்கிரசுக்கு ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் ஒரு செய்தி அனுப்பினர். இதே அபிப்பிராயத்தைத்தான் டாக்டர் பட்டாபி சீதாராமையாவும் தெரிவித்தார்.

இந்த முறைப்படி திருத்தித் தொகுத்தால் இந்த 601 சமஸ்தானங்களும் 50 ஆகக் குறைந்துவிடும்.

மொழி வாரியாகத் திருத்தி அமைப்பதாயிருந்தால் 14 மாகாணங்கள் ஏற்படும். இந்த 14 மாகாணங்களுடன் 50 சமஸ்தானங்களையும் சேர்த்து சமஷ்டியாக அமையும்.

—

### பருத்தித் துணிகள் சப்ளை
#### பம்பாயில் தனிக் காரியாலயம்

சப்ளை இலாகாவைச் சேர்ந்த டெக்ஸ்டைல்ஸ் டைரக்டரேட் என்று சொல்லப்படும் துணிக் காரியாலயமும், கொள்விளைப் பகுதியைச் சேர்ந்தவையும் பருத்தித் துணி விஷயமாக டேராத் துணி, கயிறு முதலியவை உள்பட சம்பந்தப்பட்ட வகைகளுமான ஏழு பிரிவுகளும் ஒரு தனிக் காரியாலயமாக அமைக்கப்பட்டு பம்பாய்க்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. இந்தக் காரியாலயத்துக்கு "பருத்தித் துணி டைரெக்டரேட்" என்று பெயர். இது பம்பாயில், பாலர்ட் எஸ்டேட்டில் இருக்கும் மரார்வ லா கட்டிடத்தில் அமைக்கப் பெற்றிருக்கிறது. 1941 அக்டோபர் மாதம் 13 தேதி முதற்கொண்டு இக்காரியாலயம் வேலை செய்யத் தொடங்கி விட்டது.

புது டில்லியில் இருக்கும் துணிக் காரியாலயம் கம்பளி போர்வைகள் உள்பட சணல் வகைகள், பட்டு, நெசவுத் துணிகள், ட்வைன், வலை முதலிய கயிறு வகைகள், இன்னும் தொப்பி வகைகள் போன்ற இதர விஷயங்கள் இவை சம்பந்தமாக வேலை செய்யும். இது சம்பந்தமாக பம்பாய்க்கு மாற்றப்பட்ட ஆபீஸர்களில் மி. டி. எம். பாஸ்மோர் காரியாலயத்தின் தலைவர், மி. டி. எம். மலோனி கொள்விளை அதிகாரி. இன்னும் கொள்விளைப் பகுதியைச் சேர்ந்த ஆபீஸர்களும் இருக்கிறார்கள். பம்பாய்ப் பருத்தித் துணி காரியாலயத்துக்கு ஸர் பிரெடரிக் ஸ்டோன்ஸ் தான் சாமான் சம்பந்தமான ஆலோசனையாளர்.

—

### தீப்பற்றுத படுதாத் துணி

தீப்பிடிக்காத படுதாத் துணி இந்தியாவில் கிடைக்குமா என்று நியூஜிலந்திலிருந்து கேட்டிருந்ததன் பலனாக விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சி டைரெக்டர் இதில் இரண்டு மாதிரிகள் தயாரித்திருக்கிறார். இந்த மாதிரித் துணிகள் கிழ்த் தொகுதித் சபையினரிடம் அங்கிகாரத்துக்காக அனுப்பப்பட்டிருக்கின்றன.

### வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் விரதாச்சாரி அணி துவக்க விழா

"விரதாச்சாரி இயக்கம் இங்கு தொடங்குவது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. நம் மாகாணத்தில் நாட்டுக்கு நன்மைதரக் கூடிய புதுப்புது முறைகளில் கல்வி பயில்விக்கும் பாடசாலைகள் மிகச் சிலவே உள. அவைகளில் தலை சிறந்து விளங்குவது இந்து மத பாடசாலை. இது வருங்காலத்தில் பெரிய கல்லூரியாக மிளிரும்" என்று உயர்திரு. பக்தவத்சலம் பி.ஏ., பி.எல்., எம். எல். ஏ. அவர்கள் சென்ற 2-11-41 வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் நடந்த விரதாச்சாரி விழாவில் தலைமை யேற்று விரதாச்சாரி அணி ஒன்றைத் துவக்கியபோது கூறினர். விழாவிற்கு சென்னைமாகாண விரதாச்சாரி அமைச்சர்கள் திரு. கெ. சஞ்சிவி காமத் பி. ஏ., பி. எல். அவர்களும், ஸி. டி. நடராஜன் எம். ஏ., பி. எல்., அவர்களும் வந்திருந்தனர். திரு. காமத் அவர்கள் பேசுகையில், இந்துமத பாடசாலையில் உள்ள ஒவ்வொரு சிறுவனும் உண்மை விரதாச்சாரியாக விளங்குகிறான் என்று பாராட்டிக் கூறினர். விரதாச்சாரி அணி தனது வேலைத் திறன்களை யெல்லாம் காட்டியதைக் கண்டு தலைவரும் உடன் வந்த பெருமக்களும் மகிழ்ந்தனர். யாவருக்கும் பாடசாலைச் செயலாளர் திரு. வாதி மாசிலாமணி முதலியார் அவர்களும் இல்லத் தலைவர் திரு. தண்ணிகை அரசும் நன்றி செலுத்தினர்.







## மாகாண யுத்தக் கமிட்டிக் கூட்டம்

சென்னை மாகாண யுத்தக் கமிட்டிக் கூட்டம் 7-11-41-ல் சென்னை கவர்னர் மாளிகையில் நடைபெற்றது. ஸர் ஜார்ஜ் போக் தலைமை வகித்தார். படைக்கு ஆள் சேர்க்கும் சப் கமிட்டித் தலைவர் ஸர். கே. வி. ரெட்டி ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் ஆகிய மூன்று மாதங்களில் 11,856 பேர் ராணுவத்திற்குச் சேர்க்கப்பட்டிருப்பதாகவும், அதைத் தவிர 1703 தொழிலாளிகளும், 500 மோட்டார் டிரைவர்களும், 539 குமாஸ்தாக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றனரென்றும் தெரிவித்தார். பிரசார சப் கமிட்டி மெம்பர் ஸ்ரீமான் ஜி. ஏ. நடேசன் கமிட்டி செய்துள்ள பிரசார வேலைகளைப்பற்றிப் பேசினர். நிதி சப் கமிட்டித் தலைவர் மிஸ்டர் ஆர். டி. டென்னிஸ்டன் இது வரையில் பிரிட்டிஷ் விமான உற்பத்தி மந்திரி சபை இலாகாவுக்கு 10 லக்ஷம் பவுன் அனுப்பப்பட்டிருப்பதாகக் கூறினர். பாதுகாப்புக் கடன் ஸப் கமிட்டித் தலைவர் மிஸ்டர் கட்டால் சென்ற மாகாணக் கூட்டத்திற்குப் பிறகு ரூ. 1,35,00,000 பாதுகாப்புக் கடன்களாகச் சேர்ந்திருப்பதாகவும், இதுவரையில் சென்னை மாகாணத்தில் மொத்தம் ரூ 4,16,00,000 சேர்ந்திருப்பதாகவும் குறிப்பிட்டார்.

தலைவருரை

ஸர் ஜார்ஜ் போக் தமது உரையில் பல யுத்தக் கமிட்டி அங்கத்தினர்கள் அட்லாண்டிக் சாஸனம், அதுபற்றிய மிஸ்டர் சர்ச்சில் பிரசங்கம், ஹஜ் யாத்திரை முதலிய பல விஷயங்களைப்பற்றிக் கேள்விகள் கேட்டிருப்பதாயும், இந்த விஷயங்கள் இந்தியா சர்க்காராலும் இந்தியா மந்திரியாலும் கவனிக்கப்படக் கூடியவை யென்றும், ஆகையால் மாகாண சர்க்காருக்கு மேற்பட்ட விஷயங்களென்றும் கூறினர். நகரில் விமானப் பாதுகாப்பு ஸ்தலங்கள் கட்டுவது பற்றிய ஆலோசனை இருந்து வருவதாயும், ஸிவிக் கார்டுகளின் வேலை, சட்டத்தையும் சமாதானத்தையும் நிலை நாட்டுவதில் போலீஸாருக்கு உதவுவதேயாகையால் அவர்கள் பிரசாரம் செய்வது தக்கதல்லவென்றும், உபகாரச் சம்பளம் பெற்று விலகியுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் யுத்த நிதிக்குக் கட்டாயமாக உதவ வேண்டுமென்று சொல்லப்படுவதாயும், ஆனால் ஒவ்வொருவரும் இஷ்டப்பட்டே உதவவேண்டும் என்பதே கொள்கையாக இருப்பதால், அவ்விதம் சொல்ல முடியாதென்றும் ஸர் ஜார்ஜ் போக் கூறினர்.

ஸ்ரீமான் பி. ஸ்ரீராம சாஸ்திரி வந்தனோபசாரம் கூறினர்.

—

### குழாய்க் கிணற்றிலிருந்து அக்னி ஜ்வாலை

வடக்கே அமீராபாத் என்ற கிராமத்தில் குழாய்க் கிணறு ஒன்றைத் தோண்டிக்கொண்டிருக்கையில் 56 அடி ஆழத்தில் விஷப்புகை கிளம்பி, அப்பால் ஜ்வாலை ஏற்பட்டதாகவும், இது பல அடி உயரத்துக்கு எழும்பியதென்றும் சொல்லப்படுகிறது. மோசமான விளைவுகள் ஏற்படக்கூடுமென்று எண்ணி கிணற்றின் வாய் மூடப்பட்டுவிட்டது. ஆனல் இப்பொழுது இராப்பகலாக அக்கிணற்றில் பலத்த சத்தம் கேட்கிறதாம்.

—

### கிழவனுக்கு மரண தண்டனை

சத்யமங்கலத்துக்குச் சமீபம் ஒரு கிராமத்தைச் சேர்ந்த செல்லாண்டி என்ற 60 வயதுக் கிழவன் தன் மனைவியைக் கொன்றதாக ஏற்பட்ட வழக்கில் கோவை செஷன்ஸ் ஜட்ஜ் எதிரிக்கு மரண தண்டனை விதித்திருக்கிறார்.



## நோட்டீஸ்

9—10—41-ந் தேதியில் வெளியான "குமரன்" பத்திரிகையிலும், "தேச ஊழியன்" பத்திரிகையிலும் அரிமளம் விசாலாச்சிக்காக புதுக்கோட்டை வக்கீல் V. S. கணபதி சாஸ்திரியாரின் பெயருடன் செய்திருக்கிற விளம்பரங்களில் கண்ட விஷயங்கள் முற்றிலும் அவதூரான கட்டுப்பாட்டு பொய் உரைகளாக இருக்கிறதை என் கக்ஷிக்காரரான கா. ச. அ. கா. அண்ணுமலை செட்டியார் அதி தீவிரமாக மறுத்து ஆக்ஷேபிக்கிறார். இந்த அவதூறான கட்டுப்பாட்டு பொய் உரைகளை உடனே வாபிஸ்வாங்கிக் கொள்ளும்படி என் கக்ஷிக்காரரும் தன் அட்வோகேட்கள் மூலம் மேற்படி வக்கீல் V. S. கணபதி சாஸ்திரியாருக்கும் விசாலாச்சி ஆச்சிக்கும் நோட்டீஸ்களும் கொடுத்திருக்கிறார். இந்த நோட்டீஸ்களின்படி உடனே வாபீஸ் வாங்கிக் கொள்ளாத பக்ஷத்தில், மேற்படியார்கள் பேரில் என்கக்ஷிக்காரர் சட்டப்படி தகுந்த நடவடிக்கைகளை நடத்தி வேண்டிய பரிகாரங்களை தேடிக் கொள்வார்.

என் கக்ஷிக்காரரான மேற்படி கா. ச. அ. கா. அண்ணுமலை செட்டியாரும் தன் ஸ்வீகார தகப்பனாரான கா. ச. அ. கா. இராமஞ் செட்டியாரால் 19—10—32ல் செய்யப்பட்டிருக்கிற ஸ்வீகார ஏற்பாட்டின்படிக்கும் வழக்கப்பிரகாரம் எழுதிக் கொடுத்திருக்கிற ஸ்வீகார முறியின் படிக்கும் தனக்கு கிடைத்திருக்கிறதும் இந்தியாவிலும் பர்மாவிலும் உள்ளதுமான சகல சொத்துக்களையும் தன் கா. ச. அ. கா. விலாசமுள்ள லேவாதேவி கடைகளையும் மேற்படி இராமஞ் செட்டியாரும் தன் ஸ்வீகார மகனுக்கு டிரஸ்டியாக மானேஜ்மெண்டு பார்த்து வந்து இப்பால் 17—3—39ல் செய்த குடும்ப யேற்பாட்டின் காலத்தில் தன் மானேஜ்மெண்டையும் தன் ஸ்வீகார மகனை மேற்படி அண்ணுமலை செட்டியாரிடம் ஒப்புவித்து அது முதல் மேற்படி அண்ணுமலை செட்டியாரும் மேலே கண்டதன் சொத்துக்களையும் தன் கா. ச. அ. கா. லேவாதேவி கடைகளையும் ஸர்வ சுதந்திரமாய் மானேஜ்மெண்டு செய்து அனுபவித்துக் கொண்டு வருகிறார்.

மேலே சொன்னபடி 17—3—39உயில் நடந்திருக்கிற குடும்ப யேற்பாட்டிற்கு பிறகு மேற்படி இராமஞ் செட்டியாரும் பர்மாவைச் சேர்ந்த நவுங்காசி என்னும் கிராமத்தில் "மாலேகின்" என்கிற பெண்ணுடன் தனியாக குடியிருந்து கொண்டும், கா. ராம. என்கிற தன் சொந்த விலாசத்தில் தனிமையாக லேவாதேவி கடைவைத்து நடத்திக் கொண்டுமிருக்கிறார்.

இந்த குடும்ப யேற்பாட்டின்படி மேற்படி அண்ணுமலை செட்டியாரும் தனக்கு ஸர்வ சுதந்திரமாய் பாத்தியப்பட்டதும் புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்த அரிமளம் கிராமத்திலுள்ள கா. ச. அ. கா. விலாசமுள்ள ஊர் கடை லேவாதேவிகளையும் பர்மாவைச் சேர்ந்த சயிட்டோவிலுள்ள லேவாதேவிகளையும் வசூல் செய்து மானேஜ்மெண்டு செய்து வருகிறதற்கு அனுகூலமாக இருக்கும்படி மேற்படி இராமஞ் செட்டியாரும் தன் ஸ்வீகார மகனை அண்ணுமலை செட்டியார் பேருக்கு புதுக்கோட்டையில் 20—3—39உயில் நிரந்தரமாக இருக்கும்படியான ஒரு பவரும், பின்பு, 14—11—40உயில் மேற்படி சயிட்டோவில் மேற்படி அண்ணுமலை செட்டியாரால் நியமிக்கப்பட்டவர்கள் பேரில் அதே மாதிரியான ஒரு வசூல் பவரும் கொடுத்திருக்கிறார். இப்படி இருக்க மேற்படி பவர்களின் காரணமாக மேற்படி இராமஞ் செட்டியாருக்கு யேதோ யேஜன்ஸி பாத்திய மிருப்பதாக சொல்லி மேலே கண்ட பவர்களை ரத்து செய்திருக்கிறதாக "தேச ஊழியன்" பத்திரிகையில் செய்திருக்கும் விளம்பரமும் நியாயமல்ல. அது சட்டப்படி செல்லமாட்டாது.

இது காரணங்களினல் மேற்படி இராமஞ் செட்டியாருக்காவது அல்லது அவர் சம்சாரம் விசாலாச்சி ஆச்சிக்காவது அல்லது மற்றும் வேறு யாருக்காவது என் கக்ஷிக்காரரான மேற்படி அண்ணுமலை செட்டியாருக்கு பாத்தியப்பட்ட தான் மேலே சொல்லிய தன் சொத்துக்களையும் லேவாதேவிக் கடைகளையும் தன் இஷ்டம் போல் நடத்தி மானேஜ்மெண்டு செய்து வருகிறதை ஆக்ஷேபிக்க எவ்வித பாத்தியமும் நியாயமு மில்லை. இதையும் மீறி யாராவது என் கக்ஷிகாரருடைய பாத்தியங்களையும் மானேஜ்மெண்டையும் ஆக்ஷேபித்தாலாவது தடை செய்தாலாவது அதனல் யேற்படும் குற்றங்களுக்கும் நஷ்டங்களுக்கும் ஜவாப்தாரியாவர்கள் என்பதை இதன் மூலம் கண்டிப்பாய் எச்சரிக்கப்படுகிறது.

"தனவணிகன் பத்திரிகையில் 1—5—41ந் தேதியிலும் 19—6—41ந் தேதியிலும் என் கக்ஷிக்காரர் செய்திருக்கிற விளம்பரங்களையும் இதன் மூலம் உறுதி செய்கிறார்.

61, பார் ஸ்டீரீட், ரெங்கோன் 27—10—41

கா. ச. அ. கா. அண்ணுமலை செட்டியாருக்காக,
ஷுமாங், அட்வோகேட்,
[U Shu Maung) Barrister-at-Law.

## அவசரமாகத் தேவை

கடல் கடந்து போர்புரியும் நமது படை வீரர்களின் பொழுது போக்குக்காக, புதியனவும், பழையனவுமான ஆங்கில & இதர பாஷைப் புத்தகங்கள், பத்திரிகைகள் முதலியன நன்கொடையாக ஏற்றுக்கொள்ளப்பெறும்.

உதவ விரும்புவோர், அந்தந்த சாகத்தின் யுத்தக் கமிட்டிக்குத் தெரிவிக்கவும்.



### மில் உற்பத்தி பெருகவேண்டும்
#### அதிக நேர வேலைக்குச் சர்க்கார் ஏற்பாடு

ஜப்பானிலிருந்து ஜவுளிகள் வருவது நின்று விட்டதாலும், இங்கிலாந்திலிருந்து இறக்குமதியாவதும் வெகுவாகக் குறைந்து விட்டதாலும் இந்திய மில்லுகளின் உற்பத்தியைப் பெருக்கத் தேவையும் அவசியமு மேற்பட்டிருக்கிறதென்று மத்திய சர்க்கார் அறிக்கை யொன்று கூறுகிறது. 'ஆகவே இந்தியாவிலுள்ள எல்லாப் பருத்தி மில்களின் வேலை நேரத்தையும் 54 மணியிலிருந்து 60 மணி ஆக உயர்த்தினலன்றி உத்தேசம் நிறைவேறாது. அதிகப்படியான 6 மணி நேர வேலைக்குத் தொழிலாளிகளுக்கு அதிகப்படி கூலி கொடுக்கப்படும். இந்த யோசனையை மாகாண சர்க்கார்களும் ஏற்றுக் கொண்டிருக்கின்றன. இதை யொட்டித் தக்க ஏற்பாடுகள் செய்யும்படி சர்க்கார்களுக்கு யோசனை கூறப்பட்டுள்ளது' என்று அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

—

### "ஸ்திரீகள் சினிமா பார்க்கக் கூடாது" ஸ்ரீ சங்கராச்சாரியார் உபதேசம்

கும்பகோணம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி சமீபத்தில் மன்னார்குடிக்கு விஜயம் செய்தார். சிறிது நேரம் அமைதியாக விருந்த பின் ஸ்வாமிகள் பேசியது இது தான்:—

"ஸ்திரீகள் ஸினிமாவுக்குப் போகக் கூடாது. ஆடவர்கள் டின்னர் பார்ட்டியிலோ, டீபார்ட்டியிலோ கூடுமானவரையில் கிளப்புகளிலோ சாப்பிடக் கூடாது. இந்த இரண்டு விஷயங்களைச் சொல்லத்தான் நான் இங்கு வந்தேன். இங்கு கூடியிருக்கும் ஒவ்வொரு வரும் மேற்படி இரு விஷயங்களையும் ஐந்து பேருக்குச் சொல்ல வேண்டுமென்பது என்னுடைய அவா"

## பண்டிதமணி அவர்களின் பிரிவுபசாரம்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து வேலையினின்றும் அறுபதாண்டு எல்லை குறித்து ஓய்வு பெற்ற "முதுபெரும் புலவர்" பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் குடும்பத்தாருடன் அண்மையில் அண்ணாமலை நகர்க்கு வந்து, பல்கலைக் கழகத்து விருந்தினராகச் சில நாட்கள் தங்கியிருந்தனர். அவர்களுடைய வருகையைக் குறித்து இங்குள்ள ஆசிரியர்களும் மாணவர்களும் காட்டிய அன்பிற்கும் மதிப்பிற்கும் அளவேயில்லை. நகரத்தார் மாணவர் கழகத்தார், வித்துவான் தமிழ் ஆனர்ஸ் வகுப்பு மாணவர்கள், தமிழாசிரியர்கள், ஆசிரியர் சங்கத்தார், தில்லைத் தமிழ்க் கழகத்தார் என்னும் இவர்கள் தனித்தனியே சிற்றுண்டி பேருண்டியாகிய நல்விருந்துகளாலும், உபசாரப் பத்திரங்கள் படித்தளித்தல், மலர் மாலை சூட்டுதல், பாராட்டுரை பகர்தல் என்னும் இவைகளாலும் பண்டிதமணி அவர்களை மிகவும் உபசரித்தனர்.

அவர்கள், தமிழ் மாணவர்கள் வேண்டுகோட் கிணங்கித் தமிழ் இலக்கிய மன்றத்தில் "கவியோவியம்" என்னும் பொருள் பற்றிச் சிந்தாமணி, சிலப்பதிகாரம், பெரிய புராணம், இராமாயணம், தேவாரம் முதலிய நூல்களிலிருந்து பல செய்யுட்களை யெடுத்துக்காட்டிச் சிறந்ததோர் சொற்பொழிவியற்றி யெல்லோரையும் மகிழ்வித்தனர். ஆசிரியர் சங்கத்தின் சார்பாக விருந்து நடத்தியபோது கௌரவம் பொருந்திய வைஸ்சான்ஸலர் அவர்கள், ரிஜிஸ்ட்ரார், ஆசிரியர்கள், ஆபீஸர்கள் எல்லோரும் குழுமியிருந்தனர். புரொபசர், கா சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், புரொபசர் நரசிங்கராவ் அவர்கள், A. சிதம்பரநாதஞ்செட்டியார் அவர்கள் ஆகியவர்கள் பண்டிதமணியவர்களுடைய கல்வித் திறத்தையும், அரிய குணஞ் செயல்களையும், அவர்களால் பல்கலைக் கழகத்திற்கு உண்டான பெருமையையும் பாராட்டிப் பேசினர். அக்கூட்டத்தில் வீணைக் கச்சேரியும் நடத்தப்பட்டது. தில்லைத் தமிழ்க் கழகத்தில் உறுப்பினரும், ஆசிரியர்களும் ஏனைய பெரியாரும் ஆகிய பலர் பண்டிதமணி அவர்களுடைய பிரிவினால் தமக்கு உண்டாகும் வருத்தத்தை மிகவும் உருக்கமாக எடுத்துப் பேசினர். பண்டிதமணி அவர்கள் இனிமேல் தாம் வெளியிட எண்ணியிருக்கும் புத்தகங்களில் முதல் புத்தகத்தை அக்கழகத்திற்கே உரிமையாக்குவதாக வாக்களித்தனர்.

அடுத்த நாள் அவர்கள் தம் சொந்த ஊருக்குச் செல்லப்புறப்பட்டுப் புகை வண்டித் தொடர் நிலயத்திற்கு வந்த பின்பும் அன்பர்கள் பலர் திரண்டு நின்று மலர் மாலை சூட்டி வழியனுப்பினர். ஆகவே அவர்கள் பிரிவினால் ஒவ்வொருவர் உள்ளத்திலும் மறைந்து கிடந்த அன்பும் மதிப்பும் நன்கு வெளியாயின. (ஒ—கி)







## தேசிய சேவைக்கான தொழிற் சங்கங்கள்

தொழிற்சாலைகளுக்கு ஆள் சேர்ப்பது சம்பந்தமான டைரெக்டரும் ஆயுதச் சாலைகளின் சூபரின்டென்டென்டுகளும் தங்களுக்கு வேண்டிய தொழில் நுணுக்கந் தெரிந்த ஆட்களைத் தேசிய சேவை சம்பந்தமான தொழிற் சங்கங்களிடம் நேராகவே கேட்கலாமென்றும், இந்த அதிகாரிகள் தங்கள் சேவைகள் சம்பந்தமாய் இந்தியாவின் எந்தப் பாகத்திலுள்ள சங்கங்களோடும் நேரே கடிதப் போக்குவரத்து நடத்திக்கொள்ளலாமென்றும் இந்திய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள்.

### புதிய டாமி குக்கர்

போர் வீரர்கள் களத்தில் உபயோகிப்பதற்காகப் பரீட்சார்த்தமாகக் கண்டுபிடிக்கப்பட்ட டாமி குக்கர் என்னும் சிறு அடுப்பு இப்போது பின்னும் அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கிறது. இதில் இந்தியாவிலேயே கிடைக்கும் வஸ்துக்களைக்கொண்டு தயாரித்த கெட்டியான எரிவஸ்து அடைக்கப்பட்டிருக்கிறது. வேண்டும்போது பிரித்துவைக்கவும், வேண்டாதபோது மடித்துவைத்துவிடவுங்கூடிய அடுப்பு போன்ற ஸ்டாண்ட் ஒன்று இதனுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே போர்வீரர்கள் கஷ்டமில்லாமல் இதைக்கூடவே எடுத்துச் செல்லலாம்.

### போர்வீரர்களுக்கு பிஸ்கத்து

பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து கிடைத்த ஆர்டர்களின்படி இந்தியாவில் தயாரித்த பிஸ்கத்துகள் இதுவரை 24 லட்சத்து 78 ஆயிரம் பவுண்டு போர் வீரர்களுக்கு சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன. இதில் சுமார் பத்து லட்சம் பவுண்டு மத்தியக் கிழ்த்திசைக்குப் போயிருக்கிறது. சமீபத்தில் இரண்டு வாரத்தில் மட்டும் சுமார் 45,000 பவுண்டு சப்ளை செய்யப்பட்டது.

### ரப்பர் விலைக் கட்டுப்பாடு

நவம்பர் மாதத்திலிருந்து லண்டனில் ரப்பருக்கு விலை குறிப்பிடப்படவில்லை. சென்ற சில மாதங்களாக அமெரிக்காவில் ரப்பருக்கு ஏராளமான தேவை ஏற்பட்டு, அதில் பெரும் பாகத்தை இங்கிலாந்து சப்ளை செய்து வந்திருக்கிறது. அதற்குப் பதிலாகத் தளவாட இரவல் சட்டத்தின் ஆதரவில் யுத்தத் தளவாடங்களை இங்கிலாந்து பெற்றிருக்கிறது. அமெரிக்க சப்ளை ஒழுங்காக நடைபெறும் பொருட்டே பிரிட்டிஷ் சர்க்கார் ரப்பர் விலையைக் கட்டுப்படுத்தியிருப்பதாக ஊகிக்கப்படுகிறது.

### மாவிடுதிக்கோட்டை பெற்றோர் சங்கம்

ஷை சங்கத்தின் நிர்வாகக் கமிட்டியின் மாதாந்தக் கூட்டம் பிரஸிடெண்டு ஸ்ரீ பெரி. மு. ராம. சொர்ணம் சேர்வை அவர்களின் அக்ராசனத்தின் கீழ் 3-11-41ல் கூடியது. ஸ்ரீ மு. சி. முத்தையா சேர்வையவர்கள் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினராகச் சேர்க்கப்பட்டார். ஷை யூனியன் போர்டு ஸ்கூலுக்குக் கட்டிடம் கட்டுவதற்கு விரைவாக முயற்சி நடந்து வருகிறது.

### ஆடை உற்பத்தி அதிகரிக்கிறது

1941 செப்டம்பர் மாதத்தில் ஆடை உற்பத்திச் சாலைகள் 70 லட்சம் உருப்படிகளுக்கு மேல் உற்பத்தி செய்தன. போன வருஷ செப்டம்பரில் உற்பத்தியானதை விடக் கிட்டத்தட்ட இது ஐந்து மடங்கு அதிகமாகும்.

இந்தியாவில் இப்பொழுது 11 ஆடை உற்பத்திச் சாலைகள் இருக்கின்றன. அவை ஷாஜஹான்பூர், கான்பூர், ஆக்ரா, கல்கத்தா, சென்னை, செகந்தராபாத், பம்பாய், லாகூர், வடமேற்கு எல்லை, டில்லி, சியால்காட் ஆகிய இவ்விடங்களில் இருக்கின்றன.

### பியாப்பம்

பியாப்பம் கமலா நேரு சங்கச் சார்பில் காந்தி ஜெனன விழாக் கமிட்டியாரால் மஹாத்மாஜீயின் 73வது ஜெனன ஞாபகார்த்தமாய் ஹரிஜன நிதிக்காக ரூ 73 மஹாத்மாஜீ அவர்களுக்கு அனுப்பியிருப்பதாக ஷை கமிட்டிக் காரியதரிசி ப. செ. ச. நாகலிங்கம் தெரிவிக்கிறார்.



## நோட்டீஸ்

செங்கிரி
டி. மு. கோர்ட்டு
R. E. P. No. 704 of 41

சேலம்
டி. மு. கோர்ட்டு
O. S. 28 of 30

| | | |
|---|---|---|
| கோபால் செட்டியார் 1, விஸ்வநாதம் செட்டியார் 2 | } | 2 & 3 வாதிகள் |
| ராமநாதன் செட்டியார் 1, காசி செட்டியார் 2 | } | 1 & 2 பிரதிவாதிகள் |

இந்த நிம்பரில் ஜப்தி செய்யப்பட்டிருக்கும் 1 & 2 பிரதிவாதிகளின், சொத்துக்களை ஏலத்துக்கு கொண்டுவரவேணுமாய் 2 & 3 வாதிகள் மனு கொடுத்து, இஸ்தியாரின் ஷரத்துகளை நிர்ணயிப்பதற்காக, 9—12—41 ல் ஈரங்கி போடப்பட்டிருக்கிறது. ஆட்சேபணை உள்ளவர்கள் ஷை தேதியில் தெரிவித்துக்கொள்ளவும்.

K. வரதராஜ அய்யங்கார்,
2 & 3 வாதிகளின் அட்வொகேட்.
சேலம் 6-11-41.

## நோட்டீஸ்

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு

1941-௵ O. P. நிம்பர் 59

தேவகோட்டை மைனர் சிவகாமி ஆச்சி அவள் தகப்பனாரும் அடுத்த சிநேகிதருமான பெரி. யெ. பழ. கண்ணப்ப செட்டியார் மூலம் } மனுதார்

விசாலாக்ஷி ஆச்சி வகையரு } எதிர் மனுதார்கள்

மனுதாரின் தாயார் இறந்துபோன லெக்ஷிமி ஆச்சிக்கு மனுதார் வாரிசு யென்றும் ஷை லெக்ஷிமி ஆச்சிக்குப் பாத்தியமாய் தேவகோட்டை பெரி. பழ. சு. மாணிக்கம் யென்ற பழனியப்ப செட்டியார் வகையரு விடமிருந்து கிடைக்கவேண்டிய ஸ்திரீதன டிப்பாசிட்டுத் தொகை ரூ 7504–4–3-க்கும் பாத்திய சர்ட்டிபிகேட்டு கோரி ஷை மனு தாக்கல் செய்து 28-11-41 உ வாயிதா யேற்பட்டிருக்கிறது.

எம். சி. முகுந்தராஜா,
மனுதார் வக்கீல்.
தேவகோட்டை 8—11—41.

### பிரிட்டனுக்கு 20 லட்சம் பவுன் கடன்
#### மலாய் மன்னர்கள் உதவி

ஐக்கிய மலாய் நாட்டுச் சுதேச மன்னர்கள் யுத்த உதவியாக வட்டியின்றி 20 லட்சம் பவுன் பிரிட்டிஷ் சர்க்காருக்குக் கடன் கொடுக்க முன்வந்திருக்கிறார்கள்.

### கோதுமை விலை நிர்ணயம்

கோதுமையின் விலை அதிகமாகாமல் தடுப்பதற்கு இந்தியா கவர்ன்மெண்டார் அதன் விலையை நிர்ணயித்து விட்டார்கள். சர்க்கார் திட்டப்படி இப்போது அதன் விலை ரூ 4-6-0. 9 வருஷத்துக்கு முன்னிருந்த விலையை விட இது இரண்டு ரூபாய் அதிகம்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காங்கிரஸில் இந்தியர் பிரதிநிதியாக விளங்கினார். பின்னர் ருஷ்யா சென்றார். 1928-ல் கல்கத்தா காங்கிரஸ் பண்டித மோதிலால் தலைமையில் நடந்தது; ஆனால் அடுத்த வருஷம் லாகூர் காங்கிரஸ் பண்டித ஜவாஹர் தலைமையில் நடைபெற்றது அது முதல் நாட்டில் அரசியல் நிகழ்ச்சிகள் கனவேகத்தில் நடந்தன. மகாத்மாவின் தண்டி யாத்திரையும் உப்புப் போரும் எல்லோர் மனத்தையும் கவர்ந்தன. நேரு குடும்பம் முழுமையும் இதில் ஈடுபட்டது—மோதிலால், சொரூப ராணி, ஜவாஹர், கமலா எல்லோரும் முதல் வரிசைத் தொண்டர்கள்; ஜவாஹர், காந்திஜி, மோதிலால் எல்லோரும் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டனர். இந்தச் சமயத்தில்தான் மோதிலால் நேரு தமது 'ஆனந்த பவனத்'தைக் காங்கிரசுக்கு நன்கொடையளித்து அதைச் 'சுயராஜ்ய பவன'மாக்கினார்.

சிறைத் தண்டனை அனுபவித்த மோதிலால் நேரு தேக அசௌக்கியம் காரணமாக விடுதலையடைந்தார். 1931 பிப்ரவரி 6-ந்தேதி தேசம் அவரை இழந்தது. இத் துக்ககரமான சம்பவம் ஜவாஹர் குடும்பத்துக்கு மட்டுமின்றி தேசத்துக்கே ஒரு பெரிய நஷ்டமாகும்.

வட்டமேஜை மகாநாட்டிற்கு மகாத்மா காந்தி சென்று திரும்பியதும் தேசத்தின் நிலைமை வேறுவாக மாறியிருந்தது. ஜவாஹர் சிறைப்பட்டார். அவசரச் சட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பிறந்தன. காந்திஜியின் உண்ணாவிரதம், பூனா ஒப்பந்தம், அவர் விடுதலை, ஹரிஜன இயக்கம், சட்ட மறுப்பு நிறுத்தம் எல்லாம் நிகழ்ந்தன. 1934ல் ஏற்பட்ட பிஹார் பூகம்ப நிவாரண வேலைகளில் பண்டித ஜவாஹர் மிகுதியாக ஈடுபட்டார்.

## பண்டித ஜவாஹர் சரித்திரம்

இந்த வேலையின் மத்தியில் கல்கத்தாவில் செய்த பிரசங்கம் ஒன்றிற்காக அவர் கைது செய்யப்பட்டு இரண்டு வருடத் தண்டனை பெற்றார்.

இந்த நிகழ்ச்சிகளுக்கிடையே தேக அசௌக்கியம் காரணமாக ஸ்ரீமதி கமலா நேரு ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டார். இந்நிலையிலும் பண்டித ஜவாஹர் நிபந்தனையுடன் விடுதலை பெற விரும்பவில்லை. ஆனால் அவரது மனைவியாரின் நிலை மிகவும் கவலைக்கிடமானதாகப் போய்விடவே, சர்க்கார் நிபந்தனையின்றி அவரை விடுதலை செய்தனர். உடனேயே அவர் ஐரோப்பாவுக்குப் பறந்து சென்றார். ஸ்ரீமதி கமலா அபிவிருத்தி அடைந்த போதிலும், திடீரென மீண்டும் நிலைமை மாறி அவர் இவ்வுலகை நீத்தார். 1935-36-ம் வருஷங்களில் காங்கிரஸ் மகாசபை பண்டித ஜவாஹர் தலைமையிலேயே நடைபெற்றது. பதவி யேற்கும் பிரச்னையில் அவர் ஆதிமுதல் எதிர்ப்புக் கட்சியிலிருந்த போதிலும், காங்கிரஸ் பதவி யேற்பதென்று முடிவு செய்ததும், அவர் அந்த முடிவையே ஏற்றுக்கொண்டார்.

ஸ்பெயின் யுத்த களங்களை அவர் நேரில் பார்வையிட்டார். சீனாவுக்கு இந்தியாவின் வாழ்த்துச் செய்தியைக் கொண்டு சென்றார்.

இன்று அவரது புகழ் உலகம் முற்றும் பரவியிருக்கிறது. ஐம்பத்து மூன்று வயதை அடைந்தபோதிலும் அவர் இன்று வாலிப இந்தியாவின் வீர வாலிபராகவே திகழ்கின்றார்.

### தொழிலாளர் தலைவர் விடுதலை

எம்.எல்.ஏ-யும், தொழிலாளர் தலைவருமான டாக்டர் சுரேஷ்சந்திர பானர்ஜி தமது தண்டனைக்காலம் தீர்ந்து 7-11-41ல் கல்கத்தா சிறையில் இருந்து விடுதலை செய்யப்பட்டார்.







Edited, Printed and Published by S. MURUGAPPA for DhanaVysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S.INDIA).

